குகமயம்

# சரவணபவமாலையும், நல்லை நாமமணிமாலையும்.



இவை

யாழ்ப்பாணத்து நல்லூர்

கொக்குவில் குகதாசர்

ஸ்ரீமான் ச. சபாரத்தின முதலியார்

அவர்களால்

இயற்றப்பெற்று.

கொக்குவில்

சி. காசிப்பிள்ளை உபாத்தியாயரால்

யாழ்ப்பாணம், கொக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றன.

விபவஞு தைமீ ௴.

விலை சதம் 15.

உ

சிவமயம்.

# சரவணபவமாலை.



காப்பு.

வானாடர் போற்றுமத வாரணத்தான் ஆரணத்தான்
தானே யெனக்குச் சரண்.

நூல்.

அன்புருவாய் என்றும் அடியார் அகத்துறையும்
என்ப சரவண பவன்.

ஆதார மாறாக ஆறுதலந் தோறுறையும்
தாதா சரவண பவன்.

இமையத் தனிமுதல்வி யெம்பெருமா னப்பன்
அமையுஞ் சரவண பவன்.

ஈசனுதற் கண்மார்பத் தெஞ்ஞான்றுஞ் செம்மாந்து
வாசஞ் சரவண பவன்.

உள்ளக் கமலத் தொளித்துவிளை யாட்டயரும்
கள்வன் சரவண பவன்.

ஊனாகி யூனு ளுயிரா யுயிர்க்குயிராய்
ஆனான் சரவண பவன்.

எங்கெங்குந் தானாய் இயங்கு நிலைபொருளாய்த்
தங்கும் சரவண பவன்.

ஏகமாய் யாவு மிரண்டற் றகிலநிலை
ஆகும் சரவண பவன்.

ஐங்கரனும் ஐம்முகனும் ஆங்கோ ருருக்கொண்டு
தங்குஞ் சரவண பவன்.

ஒன்றாய் உலகுக் குயிராய்ப் பிறிதாகி
நின்றான் சரவண பவன். ௧0.

ஓங்கார மோர்முகமா யோங்காரத் துள்ளொளியாய்
நீங்கான் சரவண பவன். ௧௧.

ஔவிய மற்றுங்கே அருள்பயிலு நெஞ்சத்தை
வௌவுஞ் சரவண பவன். ௧௨.

அஃகு மமர ரஞரொழிப்பக் கைக்கொண்டான்
எஃகஞ் சரவண பவன். ௧௩.

கண்டு பிறர்க்குரையாக் கற்புடையார்க் காரருளின்
கொண்டல் சரவண பவன். ௧௪.

ஙகரங் ககரத்தை நட்டாங் குயிரைத்
தகையுஞ் சரவண பவன். ௧௫.

சங்கத் துயர்புலவ னானான் தமிழணங்கு
பொங்கச் சரவண பவன். ௧௬.

ஞமனோ டவன்தூதர் நாடாது காக்கும்
தமரைச் சரவண பவன். ௧௭.

இடங்காலம் என்றிவற்றின் எல்லை தனக்குள்ளே
அடங்கான் சரவண பவன். ௧௮.

இணங்கி யியக்கி யிருள்கடிவா னெம்மைப்
பிணங்குஞ் சரவண பவன். ௧௯.

தந்தையும் தாயும் தமரும் அருட்குருவும்
தந்தான் சரவண பவன். ௨0.

நன்மை பெருக்கி நவைகருக்கி யாண்டருளும்
தன்மை சரவண பவன். ௨௧.

பல்லா ருயிரைப் படிமுறையி னீடேற்றும்
தொல்லோன் சரவண பவன். ௨௨.

மற்றொரு மில்லா வறிவோர்க் கொருதுணையா
யுற்றான் சரவண பவன். ௨௩.

இயல்பு திரியாமல் எக்காலும் எத்தொழிலும்
அயர்வன் சரவண பவன். ௨௪.

அரனைப் பரம்பொருளென் றையமறக் காட்டும்
குரவன் சரவண பவன். ௨௫.

இலகுமெழிற் சந்நிதியில் எத்தொழிலு நீடக்
குலவும் சரவண பவன். ௨௬.

வற்றா வருட்சலதி வாடித் தளர்வேற்குக்
கற்றா சரவண பவன். ௨௭.

அழல்நுதற்கட் டோன்றி யவதரித்த சோதி
மழலை சரவண பவன். ௨௮.

இளமையெழின் மாட்சிதரு மீராறு தோளான்
குளகன் சரவண பவன். ௨௯.

அறநீர்மை குன்றா அருட்பெரியார் தம்மை
மறவான் சரவண பவன். ௩0.

அனகன் குமரேசன் ஆருயிரை நீங்கா
நினைவன் சரவண! பவன். ௩௧.

கற்றார் கனிரசமாக் காதலிக்க வாறுமுக
முற்றான் சரவண பவன். ௩௨.

காரியலு மஞ்ஞைக் கலாபமிசை யூர்ந்தருளும்
சீரன் சரவண பவன். ௩௩.

கிராதப் பிராட்டி கெஜமாது பாங்கின்
விராவுஞ் சரவண பவன். ௩௪

கீண்டு கிரவுஞ்சங் கேதம் படுத்திடுவேல்
காண்டிஞ் சரவண பவன். ௩௫

குன்றந்,தொறுமாடல் கொண்டுவிளை யாட்டயரும்
என்றும் சரவண பவன். ௧௬

கூசா தடியார் குறைதவிர்த்தாட் கொண்டருளும்
ஆசான் சரவண பவன். ௧௭

கெட்டாருந் தன்னைக் கிளத்தி னவர்பிரிய
வெட்டான் சரவண பவன். ௧௮

கேள்வி முயன்றார் கிரமந் தவர்தடையார்
வாழ்வு சரவண பவன். ௧௯

கைலாய நாதன் கவுரி யருட்சேய்
மயிலான் சரவண பவன். ௨௦

கொல்லா விரதநெறிக் கொள்கையினோர்க் கீயுநலம்
எல்லாம் சரவண பவன். ௨௧

கோல மயிலுகைத்துக் குப்புறுமாற் கூற்றுவரும்
காலம் சரவண பவன். ௨௨

கௌமார தந்திரத்திற் கண்டாங் கிறைஞ்சுநர்க்கும்
பெம்மான் சரவண பவன். ௨௩

சத்தன் சிதானந்தன் சாட்குணன் றாரகத்துக்
கத்தன் சரவண பவன். ௨௪

சாவும் பிறப்பு மறுத்தான்வந் தெமதுளத்தில்
மேவுஞ் சரவண பவன். ௨௫

சித்தந் தெளியச் சிவநாம நாத்தந்தான்
அத்தன் சரவண பவன். ௨௬

சீரலைவாய் பாசந் திருகும் பதியான
ஊரான் சரவண பவன். ௨௭

சுத்தநிலைக் கப்பாற் சுகாதீத வாழ்வருளு
முத்தன் சரவண பவன். ௨௮

சூரரொரு மூவர்தமைத் தொன்று ளடர்த்தபெரு
வீரன் சரவண பவன். ௪௯.

செந்தி பரங்குன்று திருவாவி நன்குடிவாழ்
கந்தன் சரவண பவன். ௫0.

சேணுலவு குன்றந் திருவேர கஞ்சோலை
வாணன் சரவண பவன். ௫௧.

சைவமறைப் பைங்கூழ் தழைப்ப வருண்மாரி
பெய்வன் சரவண பவன் ௫௨.

சொல்லும் பொருளுமெனத் தோன்று முலகனைத்தும்
புல்லும் சரவண பவன். ௫௩.

சோகமாம் பாவனையாற் றொன்னெறியி னத்துவிதன்
ஏகன் சரவண பவன். ௫௪

சௌமந் திரத்திற் றகையுந் திருவருளான்
பௌமன் சரவண பவன். ௫௫

ஞமலி குரைத்தாங்கு நான்பிதற்றத் தான்கேட்டு
அமர்வன் சரவண பவன். ௫௬

ஞான விளக்கேற்றி நாடுநர்க்குத் தானருளும்
மோனஞ் சரவண பவன். ௫௭.

ஞிமிறு படர்ந்திசைத்து நீடக் கடம்பணியும்
அமலன் சரவண பவன். ௫௮

ஞெகிழுஞ் சிறுசதங்கை நின்றிசைப்ப வாடி
மகிழுஞ் சரவண பவன் ௫௯

ஞேயத் தழுத்தி நினைப்பு மறப்பறுக்கும்
நாயன் சரவண பவன். ௬0

ஞைஞையென் றென்னை நகைப்பார் தமக்கிடமாய்
வையான் சரவண பவன். ௬௧

ஞாளி யலமந்து நோயுற் றயர்ந்தேனை
வெல்கான் சரவண பவன். ௬௨.

தாம்முணர்ந்தார் தம்மைத் தனக்குட் கரந்தருளும்
செம்மல் சரவண பவன். ௬௩

தானே தனக்குத் தலைவன் தனிமுதல்வன்
கோனுஞ் சரவண பவன். ௬௪.

திருவாவி னன்குடியிற் றேவரொடு மூவர்க்
கருளும் சரவண பவன். ௬௫.

தீயுருவாய்த் தோன்றித் திரைபெறுநீர்க் கங்கைபுகுந்
தேயுஞ் சரவண பவன். ௬௬.

தும்பிமுக னைக்காட்டித் தோய்ந்தான் குறமானை
நம்பி சரவண பவன். ௬௭.

தூயன் அடியேன் துயரஞ் சகியாத
நேயன் சரவண பவன். ௬௮.

தெளியேன் நிலையில்லேன் சிற்றறிவி னேற்கும்
எளியான் சரவண பவன். ௬௯.

தேவர் தமைக்காப்பச் சேனைப் பெருந்தலைவன்
ஆவன் சரவண பவன். ௭0.

தையலார் ஓரிருவர் தம்மோ டமர்ந்தருளும்
ஐயன் சரவண பவன். ௭௧,

தொல்லா ரணமும் தொடர்பரிய சேவடியான்
நல்லான் சரவண பவன். ௭௨.

தோற்ற முடிவில்லான் சுப்ரமண்யன் கலக்கும்
கூற்றஞ் சரவண பவன். ௭௩.

தௌவை தணந்தகலத் தானளிக்குந் தன்னருளின்
செவ்வி சரவண பவன்.

நம்பினரைக் கைவிடா நால்வாய்க் கரிமுகத்தன்
தம்பி சரவண பவன். எரு.

நாக விறைவிதனை நாகத்து வேட்டளித்தான்
பாகஞ் சரவண பவன். எசா.

நிகமா கமம்பரவி நின்றுதனைக் காட்டும்
பகவன் சரவண பவன். எஎ.

நீக்க மறவென்னுள் நின்று அருள்புரியும்
ஆக்கம் சரவண பவன். எஅ.

நுண்ணியதின் நுண்ணியா னோக்கமகத் தின்மகத்தாம்
அண்ணல் சரவண பவன். எகூ.

நூலுணர்விற் கெட்டா நொடியின் அகத்தன்பிற்
சாலும் சரவண பவன். அ0.

நெக்குருகு மன்பர் நினைவு டழுந்தியவர்
துய்க்கும் சரவண பவன். அக.

நேமியான் கஞ்சன் நிலையுற் றிடவருளும்
சாமி சரவண பவன். அஉ.

நையுமடி யொன்றோ நாநா வகைதீரச்
செய்யும் சரவண பவன். அங.

நொந்து மனம்வாடி நுடங்குனர்க்குத் தான்பரியும்
எந்தை சரவண பவன். அச.

நோற்றல் புரியேன் நொடிக்கோர் பவம்புரிவேற்
கூற்றஞ் சரவண பவன். அரு.

பலவாஞ் சமயப் பகுப்பினர்க்குந் தேவன்
அலனோ சரவண பவன். அசா.

பாவம் பணிகூசப் பண்ணிடினும் தான்கூசான்
தேவன் சரவண பவன். அஎ

பிரமற் கிறையிட்டுப் பேருலகைத் தான்படைத்தான்
பரமன் சரவண பவன். ௮௮.

பேச முதற்பொருளைப் பிரமற் கறிவுறுத்தான்
ஈசன் சரவண பவன். ௮௯.

புராரி யகத்தியற்குப் போத உபதேசக்
குரவன் சரவண பவன். ௯0.

பூதங்க ளைந்தாய்ப் பொருந்துமதி புற்கலராய்
நாதன் சரவண பவன். ௯௧.

பெண்ணாண் அலியென்னும் பேதங் கடந்த அருள்
வண்ணன் சரவண பவன். ௯௨.

பேரா இடும்பைப் பெரும்பிறவி நோயறுக்குஞ்
சீரான் சரவண பவன். ௯௩.

பையு ளுழந்தார் பருவரலைப் போக்கியருள்
செய்யுஞ் சரவண பவன். ௯௪.

பொல்லா தவர்க்குப் பொல்லானா னெனினும்நனி
நல்லான் சரவண பவன். ௯௫.

போதன் அரிமுதலாம் புங்கவர்கள் ஏத்துபரஞ்
சோதி சரவண பவன். ௯௬.

பௌவத் தெழுந்த பராரையிரு கூறுக்குந்
தெவ்வன் சரவண பவன். ௯௭.

மறுதிபுல வேட்டுவர்பால் வள்ளிதனை மீட்டான்
அறுதி சரவண பவன். ௯௮.

மாண்பே றுருக்கொண்டான் வானவருந் தானவரும்
காண்பான் சரவண பவன். ௯௯.

மிடியுழந்த கீரன் வியன்தமிழ்கேட் டாண்ட
கடவுள் சரவண பவன். ௧00.

மீதுயருஞ் சேவல் விளங்கு நெடுங்துவசன்
ஆதி சரவண பவன். ௧௦௧



முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாய்
மன்னும் சரவண பவன். ௧௦௨

மூவா னெனைத்து முடிவிடமா நின்றவற்றை
மேவான் சரவண பவன். ௧௦௩

மெய்யறிவுக் கல்லால் விகசிதமா காதமுரு
கையன் சரவண பவன். ௧௦௪

மேலை வினைப்பகைக்கு வேலா யுதமெடுத்த
கோலன் சரவண பவன். ௧௦௫

மையார் களத்தான் மங்கை யுமைபயந்த
மெய்யான் சரவண பவன். ௧௦௬

மொழியின் மனத்தடங்கான் மூவாத சீர்த்தி
வழியுஞ் சரவண பவன். ௧௦௭

மோகமதங் கொண்டார் மும்மையினுங் காண்பரிய
ஏகன் சரவண பவன். ௧௦௮

மௌன குருவாகி வாழ்வுற்று னேரகத்திற்
சௌநம் சரவண பவன். ௧௦௯

யமனார் தமக்கஞ்சு மாங்கவரைக் காண்பான்
றமனுஞ் சரவண பவன். ௧௧௦

யாவையுந் தானாகி யவையல்லவுமாய் அப்பாலாந்
தேவன் சரவண பவன். ௧௧௧

யுகத்தானொரு நூற்றெட்டுக் கும்பர்தமைக் காய்ந்தாற்
செருத்தான் சரவண பவன். ௧௧௨

யூகத் தானாகி யுணர்வரிய மெய்ஞ்ஞான
தேசி சரவண பவன். ௧௧௩

யோகியர்த முள்ளத் தொளிவாய் விளங்குமனு
போகி சரவண பவன். ௧௧௪

யௌவனச் செம்மேனி யிலகுந் திருநீற்றுச்
சைவன் சரவண பவன். ௧௧௫.

ரத்தினசிம் மாசனத்தி லேந்திழையார் பாங்கமரும்
கத்தன் சரவண பவன். ௧௧௬.

ராக்கதரைப் போக்கி யிமையோர்க்குத் தன்கருணை
தேக்குஞ் சரவண பவன். ௧௧௭.

ரிடபத் துமையா ளொடுத்துரைத்தா ளீசன்
புடையிற் சரவண பவன். ௧௧௮.

ரீங்காரம் பாடி யீண்டுங் கடப்பகல
நீங்கான் சரவண பவன். ௧௧௯.

ருத்திரரைக் கையி லுறுபடையாக் கொண்டமர்ந்தான்
சத்தன் சரவண பவன். ௧௨0.

ரூப னரூப னுரூபா ரூபனருட்
சோபன் சரவண பவன். ௧௨௧.

ரேணு வளவன்மை யெல்லிற் பெரிதாக்குப்
தாணு சரவண பவன். ௧௨௨.

ரோக மலப்பகையை யுண்ணின் றறுக்குமருட்
டாகி சரவண பவன். ௧௨௩.

ரௌரவத்தி லென்னை யிடருழக்க வையானங்
கௌரி சரவண பவன். ௧௨௪.

லம்போ தரனுக் கிளவலா வந்துதித்தான்
சம்போ சரவண பவன். ௧௨௫.

லாலி இசைபாடி யேந்திழையார் ஆடவருட்
காலும் சரவண பவன். ௧௨௬.

லிங்கந் தொறுந்தயிரி நெய்போ லியைந்தெமக்காத்
தங்கும் சரவண பவன். ௧௨௭.

லீலா விநோத மிழைத்தெயினர் தங்குழுவுட்
சாலும் சரவண பவன். ௧௨௮.

 14925

லெட்சத்தொன் பான்வீர ரேத்த வெடுத்தணிந்தான்
வெட்சி சரவண பவன். கஉகூ.

லேச நெறியா ணிடரொழிக்கு மன்பர்தமக்
கீசன் சரவண பவன். கரு0.

லோபமொடு காம முறுத்தவழிந் தேற்கனு
தாபன் சரவண பவன். கருக.

லௌகிகத்தி ளுழ்ந்தார்க்கு லௌகிகனு நின்றவரை
வௌவுஞ் சரவண பவன். கருஉ.

வல்வினையை நச்சி வருபயனுக் கஞ்சுமெனே
வெல்வன் சரவண பவன். கருரு.

வானுட ரேத்தெடுப்ப மண்பரித்துப் பாண்டியவேந்
தானன் சரவண பவன். கருச.

விழைவுழியுந் தன்னருளே வெவ்வினையைச் செய்வேற்குக்
கழைகண் சரவண பவன். கருரு.

வீரவா கெண்மர்தமை வீக்குகழற் பின்னவராச்
சாருஞ் சரவண பவன். கருசு.

வெம்போர் முகத்தேற்று வீரனைவென் றுட்கொண்டான்
அம்பாற் சரவண பவன். கருஎ.

வேலங் குசங்குலிசம் வேறு படைபரித்த
கோலன் சரவண பவன். கருஅ.

வையமிசை யெங்கு மற்றோர் துணையறியேற்
கையன் சரவண பவன். கருகூ.

வௌவு மிடியுழப்ப வாடியலந் தேற்கருளின்
பௌவஞ் சரவண பவன். கசு0.

திருச்சிற்றம்பலம்.

---

உ

குகமயம்.

# நல்லை நான்மணிமாலை.



## காப்பு.

செந்தா திறைக்குமலர்த் தேம்பொழில்சூழ் நல்லைவரு
கந்தா வுனது கழலிணைக்கீழ்—அந்தாதி
மாண்புதரு நான்மணிப்பா மாலைபுனைந் தேத்தநல்கும்
காண்பரிய முன்னோன் கழல்.

## நேரிசை ஆசிரியப்பா.

அம்புலிகங்கை யணைந்தரவாடச்
செம்பொனம்பலத்துச் சேணுறவிளங்கி
பதஞ்சலிவியாக்கிர பாதர்கண்குளிர
இடம்பெறுமடந்தை இடத்தருணோக்கி
ஐவகைலீலை யருணடம்புரியுஞ்
சைவசிகாமணி தனிப்பெருநாட்டத்
தொளிப்பிழம்பாக வுதித்தருள்குமர
அளிக்குலமையுற் றரற்றிடவிருண்ட
மைதிகழ்குழலாண் மடித்தலத்திருந்து
மெய்தவழ்வேத விருத்திசெய்குதலை
செய்யவாயிதழ்ச் சேயிளங்குரவ
துய்யமாமறைக டுருவியுங்காணத்
திருவடிமலர்க்குச் சிறியனேன்செப்பும்
ஒருமுறையீடொன் றுவந்துகேட்டருள்க
மற்றியானிந்த மகிதல மதன்கட்
பெற்றுளபேறே பிணியலாதில்லை
இம்மிடியனைத்து மீசநின்கருணைச்
செம்மையாலன்றித் தீர்வதுமில்லை
தண்ணளியதுதான் றமியனேனியற்றும்
புண்ணியமின்றேற் புகுவதுமிலையாம்

ஏனுறுபுண்ணிய மெள்ளளவேனுமென்
பானுறுலீலையாற் பகவனேயினியான்
செய்வதெனந்தோ சிறியனேனீண்டைக்
குய்வதுமுளதோ வுனதுவான்கருணை
பொங்கித்ததும்பிப் புரள்வுறுமதனுள்
இங்கெட்டுணைதான் எனதுபுன்செயல்களை
நல்வினையாக்குமா நல்கிநல்லூரிடைச்
செல்குநரடையுந் திருவருட்பேறு
தகுதியாலடியேன் சகத்தில்
மருவிடுமிடியெலா மறிந்துநீங்கிடவே.

## நேரிசை வெண்பா.

நீங்கா தெவர்க்கு நெடுந்தூர மாகிநிற்கும்
ஓங்கார மூலத் துயர்பொருளே—காங்கேயா
நல்லார் தொழுதேத்து நல்லைப் பதியமரும்
தொல்லோ யழித்தா டுயர்.

## கட்டளைக் கலித்துறை.

துயரப் பெருங்கடற் சூறையி னெற்றுண்டு சோகத்தினல்
அயர்வுற்று மாழ்கி யறிவிழந் தேயல மந்தழியும்
கயவர்க்கு ணீசன் எனையா தரிப்பக் கருதுவையோ
நயமொய்த்த பாவல ரேத்துகந் தாநல்லை நாயகனே.

## விருத்தம்.

நாயக மாகி யமரரை யளிக்கு
நாதனே நான்மறைக் குரிய
தூயரேத் தெடுப்பத் தொல்லைநாட் கேதீச்
சுரத்தமர் சுயம்புமுன் றந்த
பாயபே ரருளிற் பௌவமே நல்லைப்
பதியமர் பரஞ்சுடர்க் கொழுந்தே
நீயனே னெனது குறைமுடித் தருளத்
திருவுள மிரங்குதல் வேண்டும்.

## நேரிசை ஆசிரியப்பா.

வேண்டுநர்வேண்டுவ வேண்டியாங் களிக்கும்
மாண்டகுபேரருள் வள்ளலேதமியேன்
நின்னடிபணியேன் நினைவலஞ்செய்யேன்
உன்னடிச்சேவை யுளத்திலுங்கருதேன்
ஆதலினென்னை அலமரவிட்டு
நீதியிற்பிறழ்ந்த நெறியினனேனுமுன்
பாதபங்கயக்கீழ்ப் பத்திமைகாட்டும்
ஏதிலார்தமக்குமற் றின்னருள்புரிவையேல்
மற்றுநானுய்யும் வழியுமொன்றுண்டோ
கற்றவருவப்பக் காசினியதன்கண்
நீதியுமறியேன் நேசமும்புணரேன்
சோதியேயுனக்குத் தொழும்பனென்றொருபேர்
போலியினுடைப் புவியெலாமிகழ
மாலுறுகின்றேன் வளர்திகழ்நல்லைப்
பதியிடங்கொண்டு பாரகமனைத்தும்
கதிபெறுநடனங் காட்டிடுவள்ளல்
உன்றிருவருளி னுறுதியைநாயேன்
இன்றிதுவாமென இயம்பிடவற்றோ
இரப்பவர்க்கீயு மியல்பினையாதலின்
உரைப்பருமுனதருட் குரிமைதந்தருளி
ஐயனேயென்மிடி யகற்றுதலுன்
செய்யபேரருட் டிருவடிப்பரமே.

## நேரிசை வெண்பா.

பரனே பரநாரி பாலகா பாணி
தரனாக வந்தளித்த சாமீ—சூரனோடு
குல்லைமா லதிவகுளங் கோங்க டவிபுடைசூழ்
நல்லை முருகேசா நம.

## கட்டளைக் கலித்துறை.

நமனோ டெதிர்த்துச் சமராடி வெல்வரிந் நானிலத்துத்
தமராய நீசர் பகைசூது வஞ்சகர் தாமிரிந்து
கமநீ ணெறிப்படர்ந் தோடிடக் காண்பரங் கந்தனுயர்
அமரேச நல்லைப் பதிவாழ் குமரனுக் கன்பர்களே.

### விருத்தம்.

அன்பகந் ததும்ப விருகணீர் சொரிய
வானந்த வாரிதி படிந்தே
என்புநெக் குருக வனலிடைப் பட்ட
விழுதென வுளமிகக் கரைய
கொன்பயி லயில்வேற் குமரனை நல்லைக்
கோயிலிற் கண்டுகை தொழுதால்
என்பெற லரிதா மிம்மையே மறுமை
ஈரிடத் தினிலுமிங் கெவர்க்கும்.

### நேரிசை ஆசிரியப்பா.

எவரெவர்தமக்கு மினியபேரருள்
அவரவர்தகுதிக் கமைந்தவாறளிக்கும்
பன்னிருகரத்துப் பகவனேதமியேன்
நின்னருட்கிலக்கா நெறியலனேனும்
திசையிசைபோக்கிச் செலுத்தியகீரன்
நசையினர்க்கார்த்து மிசைபோராள
அலர்ந்தோரக்களிக்கும் பொலம்பூட்சேயென
நிலந்தோயநின்னை நித்தலுமிறைஞ்சப்
போற்றிடுமாற்றால் புகல்பிறிதறியா
ஆற்றருமிடியினே னலக்கணுக்கிரங்கி
தேவநின்றிருவருட் டிறத்தொருசிறிது
பாவியேற்கின்று பணித்திடல்வேண்டும்
பசைமாமயிலிற் பவனிகொண்டுலவி
நச்சியதெய்வ நாயகிகுறமகள்
இருபுறந்தழுவ வெஃகமீதெடுத்து
பொருவருமாறு புண்ணியவதனமும்
பன்னிருகையும் பவளவாய்மலரும்
முன்னியவிழித்துணை மூவிரண்டொருசெவி
அத்தொகையமைய வருளுருத்தாங்கி
வித்தகவிநோத விழுத்தகுநல்லூர்க்
கோயில்கொண்டருளும் குமரநாயகனே
தாயிலார்தமக்குத் தாயெனவிளங்கும்
சுப்பிரமணிய சுவாமீஇ
இப்போதடியேற் கிரங்குதி இனிதே.

## நேரிசைவெண்பா.

தேன்பிலிற்றுங் கொன்றைமலர் செங்கடம்பி னிற்புரள
வான்பிலிற்ற வையன் மடியேறி — கூன்பிலிற்றி
வேதத் துறையுரைத்த வித்தக வீரநல்லூர்ப்
பாதந் தொழுநான் பணி.

## கட்டளைக் கலித்துறை.

பணியாக நாக மணிந்தாலும் பங்கிற் பராபரையும்
இணையாக மேவி விடைமே லிவர்ந்தெழ லிந்நடுவே
மணியார மாட மதலையின் மேவி வரும்பவனி
அணிகூர நான்கண் டிறைஞ்சுவ னோநல்லை யாரமுதே.

## விருத்தம்.

அறுமுகந் ததும்பு மளியினுக் கெளியே
னருகனோ வாருயிர்த் தொகுதி
நெறிமுறை யொழுகா திழுக்கினு மவரை
நித்தனின் னருட்குண மன்றால்
வறிதெனைப் பலவா மன்மிடி யொறுப்ப
வாடினேன் மற்றவை யொழித்துச்
சிறிதருட் பார்வை யளித்தரு ளல்லைச்
சின்மய வருட்பெருந் தேவே.

## நேரிசை ஆசிரியப்பா.

தேவரையேவிச் சினந்திடுமவுணர்
ஏவருமடிய வியற்றினையன்றிப்
பூசனைவழீஇப் பூதவாயுறை
வாசியல்கீரனை யழித்தனையல்லால்
வேட்டுவரினத்துறீஇ விளங்கியதெவ்வை
மீட்டினதாடல் விருப்பொடுவிளக்கினை
வில்லொடுவேல்சரம் விடாதுகைப்பற்றி
அல்லொடுபகலா வடர்வனத்துறீஇ
விலங்கினம்படுத்து மிசைந்துளலெயினரை
வலங்கெழுமைத்துன மரபுகொண்டாடினை
கலியுகமிசைக்கண் கண்டமெய்த்தேவனு
உலகினர்மகிழநல் லூரிடைவதிந்தனை

அருள்வழிநதொழுகு மாறுமாமுகதமெதப்
பெருமநீதமியேன் பீடழிந்திந்நாள்
வருந்துவதொழித் தென்மனஞ்
சுரநதருள் குறையெனைச் சூழ்வனமுடித்தே.

## நேரிசை வெண்பா.

முடித்தாய நால முயலகனை யூன்றி
நடித்தாடு மம்பலத் துற்றான் — கடித்தேர்
அவ்வேரா கணித்துநல்லை யம்பலத்து ளாடும்
தவராச வேத்துறுகந தன்.

## கட்டளைக் கலித்துறை.

தனணு ரடியர் பொருட்டாக வேறபடை தாங்கியவர்க்
கென்னுனு மூன முறுவதுண் டேலெதி ரேற்றுவந்து
முன்னுக நின்றது தீர்த்தரு ளாறு முகன்குறமான்
றன்னுய னல்லைப் பதிநாய கன்தேவர் நாயகனே.

## விருத்தம்.

நாயக மாகி யுலகினைப் புரக்கு
நாதனே நான்மறைப் பொருளே
தீயனே னெனக்குத் தேவரீர் சுரந்த
திருவருள் பலப்பல வெனினும்
ஆயபே ரருளை மதித்திடா தெனைத்தா
மலக்சனை நோக்கியே யலநதேன்
தூயமா நல்லைப் பதியமர் குமரா
தொலைத்தரு ளடியனேன் துன்பம்.

## நேரிசை ஆசிரியப்பா.

துன்பமுநதுயருர் சோகமுமிடியும்
வன்பெறுபகையும் மற்றுளவிநிம்மையும
வழைமேயனெளியே னிரக்கமிலேனைப்
போழுறவடியேன் புலனெறிகலஙகிச
செய்வதொன்றறியேன் றிகைத்தலமநதேன்
எய்துவவெனைத்து ஈசநின்விதியே
யாயினுமவற்றை யாற்றகிலேனெனிற்

தாயினுமினிய சண்முகப்பெரும
நல்லைமர்நகரிடை நடம்பயில்குமர
வல்லைவந்தவற்றை மாற்றுதலுனது
திருவருள்மரபாந் திகழ்தரு
மருவுருவமைந்த வாறுமாமுகனே.

நேரிசை வெண்பா.

ஆறு முகனீ யடியார்க் கிரங்கியவர்
தேறு முறையருளுந் தெய்வநீ — வேறுதுணை
இல்லேன் மிடியனைத்து மில்லார்க்கு வானமைந்தாய்
நல்லூர்ப் பதியி னயந்து.

கட்டளைக் கலித்துறை.

நயந்தே யுனையணி நல்லைத் தவத்திடை நாளுங்கண்டு
புயந்தோய நீருகுத் தர்ச்சித்து வாழ்த்திலன் பொன்னடியை
வியந்தே துதித்து வணங்குகின் றேனலன் மேவலர்கருப்
பயந்தே னெனையுவர்த் தெள்ளாது காத்தருள் பண்ணவனே.

விருத்தம்.

பண்ணமரு மிசையெடுத்துப பாமாலை
புனைந்தேத்திப் பணிந்து பாடி
நண்ணலரைப் புறங்கண்டா ரடியார்கள்
என்னுமொழி நயந்து கேட்டு
விண்ணவர்கள் தொழுதேத்த நல்லைநடம்
பயில்கின்ற விரைத்தாண் மீது
கண்ணியெனு விசைத்தவென திழிமொழியு
மேற்றருளிக் கருணை செய்வாய்.

நேரிசை ஆசிரியப்பா.

பாயகன்ஞாலப் பரப்பிடையொருசிறு
நாயினுங்கடைய நானுமோர்பொருளெனத்
தேவரீர்திருவருட் டிறத்தினையறியா
தாவலிற்பலப்பல வலந்தலந்துள்கினேன்
அளவுறுதுனதரு ளாற்றலினீர்மை
தெளிவுறேனறியுந் திறத்தமோவன்றுல்
சிறியனேனென்னது சிற்றறிவனைத்துநின்

பொறையமர்திருவடிப் பொற்பினுற்சமித்தே
என்னிடைப்படுவ விடர்க்குலமனைத்துநின்
பொன்னடித்துகளாற் போக்கிமற்றென்னை
பாரோர்குழுமிப் பழித்திடலொழித்தெனக்
காராவன்புன தடியிணைக்கருளி
ஐயநின்பணிவகை யனுதினம்புரிந்
துய்யுமாறெனக்கோ ருறுதிதந்தருளாய்
நல்லையாஞ்செல்வ நகரிடைத்
தொல்லையோர்போற்றத் துலங்குவேலவனே.

நேரிசை வெண்பா.

வேலவனே நல்லை விளங்கு மறுமுகத்துக்
கோலமது கொண்டு கொக்குவிலுட் — சீலமுடன்
வீற்றிருக்குங் காட்சி விழியாற் றரிசிக்கு
மாற்றமெனக் கின்றருள்வாய் மன்.

கட்டளைக் கலித்துறை.

மன்னு வெனக்கென தஞ்ஞான வாணவ மாயைகன்மம்
என்னு வினைந்த வியற்பகை நாளு மிடருறுத்தப்
பின்னுக வந்தெனை மனிதப் பகைகளும் பீடிக்குமேல்
என்னே யினிச்செய்வ னல்லூ ரமர்ந்த விளஞ்சிங்கமே.

விருத்தம்.

சிங்கமே வியவமலை யருட்சுதனை
 யடைதரித்துத் தேவ ரெல்லாம்
மங்குவா [illegible]ரவர்மிடையைப் பொடிபடுத்தி
 யரசளித்து வாழுமைந்த
துங்கமே யுனதடியார் துயரறுப்ப
 நல்லைவரு தோன்று லென்னை
நுங்குமா மிடியனைத்து நுண்டுகளாக்
 கிடுவையரு ளேக்கத் தாலே.

நேரிசை ஆசிரியப்பா.

ஆலமர்கண்டத் தண்ணலைமுன்னாட்
காலனையுதைத்த கழலிணையோனை
அம்பலத்தாடு மற்புதமூர்த்தியை
உம்பருமறியா தொருதனிப்பொருளை

ஏவல்கொண்டருளி யிடைநிசியதன்கட்
பாவைதன்வாயிற் படியிடைத்தூதா
விரகிடவிடுத்த விழுத்தகுமன்பன்
தரித்திரமதனுற் றமியனேன்றளர
விடுத்துநீநல்லை வியன்பதியதன்கட்
தடக்கையிலுயர்வேல் தாங்கியாங்கமைந்து
வீற்றிருந்தருள்வையோ மேதினி
நாற்றிசைபோற்று நம்பெருமானே.

## நேரிசை வெண்பா.

மானுர் விழியுமையாண் மைந்தா மதகளிற்றுக்
கோனுர்க் கிளைய குமரேசா — தேனுர்
மலர்ப்பொழில்சூழ் நல்லைவரு வள்ளி மணவாளா
கலக்கமது தீர்ப்பாய் கனிந்து.

## கட்டளைக் கலித்துறை.

கனிந்தே யுனது திருவடித் தாமரை காதலித்துப்
புனைந்தேத்து கிற்பவ ரல்லாத செய்யினும் புந்தியினீ
நினைந்தா றளிப்பது கண்டுகொண் டேநல்லை நீணகரிற்
றினந்தோறு நித்தம் பயிலாறு மாமுகச் சின்மயனே.

## விருத்தம்.

மயின்மிசைத் தங்கிப் பிடியொடு குறமான்
மருவிட வருந்தனிக் கோல
மயின்றனர் பரவி யடியர்க ளெல்லா
மரகர முழக்கெடுத் தலற
வியன்றரு நல்லைப்பெரும்பதி யதனில்
வீற்றிருந் தருள்கும ரேசா
அயர்ந்தன னடியேன் வேண்டுவ முறைகே
டாயினு மளித்திடல் வேண்டும்.

## நேரிசை ஆசிரியப்பா.

வேண்டுவவெறுப்ப மேவிடாவடியார்
காண்டகநல்லைக் கருணையம்பதியிற்
கோயில்கொண்டருளும் குமரநாயகனே
நீயெனெருகாற் றிருவடி மலர்க்கு

சொற்றிடவுள்ளந் தணிந்தனனதுகேள்
முற்றொருங்குணரு முதல்வநீயாதலின்
அவ்வவர்க்கமைந்த வளவையினளந்து
செவ்விதிநலனுந் தீமையுமளித்தலில்
நின்செயலனைத்து நீதியேயாகும்
என்பதையுணரா தெனதிடர்நோக்கி
தேவனையறியாச் சிறியனேனுன்னை
நோவதுமடைவே னுணங்கறவன்றே
தெள்ளறிவில்லாச சிறியனேனெனினும்
எள்ளிடினென்னை யெங்ஙனுய்குவனே
நீதியுமறியேன் நின்னடிக்கன்பு
சாதியேனென்கை சத்தியமேனுமென்
பருவரறேவரீர் பன்னிரு
திருவிழிசாத்தித் சிதைத்தருளுகவே.

### நேரிசை வெண்பா.

அருளார் தருநல்லை யம்பதியை நாளும்
மரபாற் பணிந்தேத்தேன் மன்னென் — றொருவேளை
எள்ளா தளித்தருள்வா யேழையேன் செய்பிழையுட்
கொள்ளாமை யேயுன் குணம்.

### கட்டளைக் கலித்துறை.

குணநாடி யன்பர்தங் குற்றங்கள் சிந்தையிற் கோடலின்றி
துணையா யவர்க்குற்ற சோகங்க டீர்த்துச் சுகமளித்துப்
பணியாக வின்னருட் சேவைதந் தாளுவை பன்னிரண்டு
திணியார் புயாசலஞ் சேர்ந்தகந் தாநல்லைச் சேவகனே.

### விருத்தம்.

சேவடி மலர்க்கீழ்ப் புரிதரு மன்பே
திருவருட் கருகமல் லாது
மேவிடு மன்பி லுறற்றுப வினைகள்
வியர்த்தமே யாமெனச் சுருதி
கூவிடு முண்மைப் பொருளினைக் குறியார்
கொண்டுள வினைகளாற் றம்மைத்
தாவிடு மிடிகள் அகற்றவல் லுனரோ
தலத்துயர் நல்லைவாழ் தக்கோய்.

### நேரிசை ஆசிரியப்பா.

தக்கதோனல்லைத் தலத்தாங்கென்றும்
கொக்குவில்வரைப்பிற் கோவில்கொண்டருளும்
தன்னிகரில்லாச் சரவணபவனே
உன்னடிக்கன்பொன் றுடையனேற்றீவினை
என்னையென்செயுமோ எம்பெருமானவ்
வன்பிலனுயி னடியனேனல்வினை ;
மற்றெனைப்புரக்கு மாற்றமுமுண்டோ
சற்றுமிந்நீர்மை தனையுளங்கொள்ளேன்
தாதையையெறிந்த தனயனன்பாதனால்
மீதுயர்பதத்து விளங்கியதுணரேன்
அன்பின்றுனுற்று மயன்சேய்மகங்கள்
என்பெற்றனவிதை யிதயமேல்வையேன்
பேதையேற்குற்ற பெருமிடிநோக்கி
தீதுநல்வினையின் றிறத்தையேகுறித்திங்
குற்றுளமிடியோ டொருமிடிகூடப்
பற்றகவில்லாப் பரமனேயலந்தேன்
நல்வினையதனு னம்மிடத்தன்பின்
றல்லல்களறுத்தலு மாகுமோவாகா
தாகலினின்றுட் கன்புதநதருளி
பேதுறுமடியேன் பிணிகளையகற்றி
தேகமிங்கிதுதான் சிதைதருகாலத்
தாகமமாரணக் கதீதமாமுனது
பாதபங்கயப் பருப்பொருள்
நீதரல்வேண்டு நிமலநின்களனே.

### நேரிசை வெண்பா.

களத்திற் கதித்துவருங் காரவுணர் தங்கிளையை
விளித்துச் சமராடி வென்று—களித்துமயில்
எய்யா அுகைக்குநல்லை யேநத லறுமுகனே
பொய்யா மறைக்குப் பொருள்.

### கட்டளைக் கலித்துறை.

பொருளா யுனது புகழ்ச்சே வடியன்றிப் பூமிசையே
தெருளேன் பிறிதொன்றை யின்னலுட் பட்டுத் திகைத்தலங்
மருளோட முந்து மரபினை நோக்கி மனமிரங்கி
யருள்வா ரெனக்கில் லைநீண்டு நல்லை யறுமுகனே.

## விருத்தம்.

அற்பக லாக வருமிடி யதனை
லழிந்துளே னின்னடித் துணையை
பற்பல வாறு முயன்றொரு கணத்துப்
பாவனை புரிந்திட வருந்தி
லற்புற வருவ வாயிர கோடி
மனத்தெழு மலினமா மென்றால்
சிற்பர வுருவாய் நல்லைவா ழரசே
சிறியனே னென்னினிச் செய்வேன்.

## நேரிசை ஆசிரியப்பா.

செய்யவளுறையுந் திகழணிநல்லைப்
பொய்தவிரடியார் புந்தியிற்கோயில்
கொண்டுவீற்றிருக்கும் குமரநாயகனே
மிண்டியதீய வினைவலிபடைத்துக்
கூறிடவடங்காக் கொள்கைத்தாகுமால்
மாறடுமுனது மலர்ப்பதமொருகாற்
சிந்தையினிறுவச் சிறியனேன்முயல்வுழி
வந்தெழுநினைவோ மற்றவையுலப்பில
சமயநூற்றுறையிற் சங்கைகளெழுவ
தமியனேனெடுத்துச் சாற்றிடவஞ்சும்
இகழுறுதீக்கருத் திடையிடையெழுவ
பகவநின்பாத பங்கயக்கீழென்
உளத்தினையாழ்த்தவம் தொடங்கியதோவென
கிளத்துபுவந்து கிளருமோர்நினைவு
மற்றெழுசங்கையை மாற்றிடமுன்னர்ப்
பற்றுனதடிக்கீழ்ப் பதித்திடலாங்கொலென்
றையமேலெழீஇ யமைந்தசிலன்பினை
நொய்துறபடுத்து நுணங்குசெய்தழிக்க
அழிந்தனனந்தோ வாருயிர்க்குயிராய்
வழிந்தருள்சுரக்கு மலர்க்கணீராறு
நோக்கிநின்றடியரை நுங்குபவினைகள்
போக்கிமற்றவர்க்குப் புகலெனவுனது
திருவடியளிக்குந் தேவசேனைபதீஇ

ஒருதமியேனுக் குற்றுளமிடிகள்
இவ்வயினவையாமெனை வெடுத்தியம்பிடுகோ
அவையெலாநீயே யறிகுவையாதலின்
மற்றவைபோக்கி மனத்திடை
நிற்றலுமுறைந்து நீடுவாழியவே.

## நேரிசை வெண்பா.

வாழி யறுமுகத்து வான்கருணை யூழிதொறும்
வாழியுன தடித்தா மரைமலர்கள்—வாழியென
வாயா நல்லை வளம்பதியை வாழ்த்துநர்கள்
தோயா ருலகிற் றுயர்.

## கட்டளைக் கலித்துறை.

துயராழி வாய்ப்பட் டலமந்து சோகச் சுமையுறுத்த
அயரா வலியிழந் தாவலித் தேனெனை யஞ்சலென்று
மயிலேறி முன்வந்து காத்தருள் வாய்நல்லை மாநகரிற்
குயிலால மஞ்ஞைரு நடம்பயில் கோயிலிற் கொற்றவனே.

## விருத்தம்.

கொற்றமே வுறவமரர் குறையொழித்து
வாழுட்டிற் குடியா வேற்றி
பெற்றமே வியபெருமான் உமைகளிப்ப
மயிலுகைக்கும் பெருமை தக்கோய்
சுற்றமா யடியர்கணந் தொழுதேத்த
நல்லைவரு தோன்றா லென்னை
அற்றமா னவைநோக்கி யிகழ்ந்துவிடா
தளித்தருளு னடியே தஞ்சம்.

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந் துணை.

உ



கடவுள் துணை.

மதுரை

# மீநாக்ஷி வெண்பா மாலை



இஃது

பெங்களூர் ஸிவில் அண்டு மிலிடெரி ஸ்டேஷன்,

ஸ்கூல் ஸப் அஸிஸ்டண்டு இன்ஸ்பெக்டர்

திருவெண்காடு, சுவேதாரணிய சாஸ்திரியால்

இயற்றப்பட்டு,

இராவ்பஹதூர் ஆறுகாடு,

மெய்கண்டதேவ முதலியாரவர்களால்,

பெங்களூர்

நாஷனல் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.

1906.

விசுவாவஸு௵ தை௴.

உ

# மீனாக்ஷி வெண்பா மாலை.



காப்பு.

ஆறிரண்டுக் கரப்பாலே னைசெலுத்தியருள்
வீறுகொண்ட மீனாக்ஷி மைந்தன்கழன்மேற்—பேறுறவான்
பத்தியினால் யானுமொரு பாமாலை சூட்டுவென்
சித்திநல்கு மைங்கரன்றாள் சேர்ந்து.

பூவா லணியன்பர் புன்பிறவி யின்றொருகான்
மேவா வகையருளு மீனாக்ஷி—தேவாரப்
பாவுகப்பாய் செஞ்சொற் பலவுகப்பா யொன்றறியேன்
நாவுகப்பா யன்னே நயந்து (1)

உள்ளக் கனிவுடைய உத்தமரைத் தன்கருணை
வெள்ளத் தினிதிருத்து மீனாக்ஷி—எள்ளளவும்
தூய்மையிலே னம்பத் தொழுகேன் மதுரைக்குச்
சேய்மையெனினுஞ் சேயோ திருத்து. (2)

ஓதச் செவிக்கினிய உய்த்துணரத் தேனூறும்
வேதப் பொருளவடிவாம் மீனாக்ஷி—பேதைச்
சிறியேனை யன்னை திரிவேனை நன்மை
யறியேனை யாளவா யறிந்து. (3)

சொல்லக் குறையில்லை சுட்டப் பொருளில்லை
வெல்லப் பகையில்லை மீனாக்ஷி—அல்லைப்
பகலாக்கு மூக்குத்தி பார்த்தபேர்க் கென்றும்
நிகராவார் யாரே நிகழ்த்து. (4)

நாலாங் கவிவல்லார் நாலாம் பதவி யெய்தி
மேலா யிருக்கவருள் மீனாக்ஷி—தோலாத
நாவலிமை செல்வம் நடுநிலைமை ஞானநிறை
பாவலிமை யீவாய் பரிந்து. (5)

காசியொளி யுள்ளருணை கண்ணவைவெண் காடுசெவி
வீசியொளிர் முத்தணியு மீநாக்ஷி—தேசுறுப
ஊணறிவின் மாமதுரை ஒன்றுரைநா நீரூறும்
பூணறிவில் பேதை புகல். (6)

பான்மை நினைக்குமுனம் பைம்பொற் கிரிவரிசை
மேன்மை தனைக்காட்டு மீநாக்ஷி—தேன்கமழும்
கோங்கார வில்வங் குளிர்கடப்பங் காட்டிடையே
ஒங்கார மாறு யுகந்து. (7)

அஞ்சும் படிநடுவன் அன்றெனக்கு வாராமல்
மிஞ்சுங் கடைக்கணருள் மீநாக்ஷி—புஞ்ச
வுரையுணரான் செம்மை யொழுக்குணரான் பாவ
வரையுணரா னென்றே மதித்து. (8)

காணப் பிறபுலனுங் கண்ணும் பரிசெதற்கும்
வேணிப் பரனுகக்கு மீநாக்ஷி—மாண்பச்சை
வாண்முகத்து மின்னும் வயங்கொளிமீ னுங்கெனக்குக்
கோண்முகத்த வெல்லாங் குணம். (9)

வல்லாற்கு மேருமலை வாழ்சார னேற்றதனி
வில்லாற்கும் வேண்டியருள் மீநாக்ஷி—யெல்லார்க்கும்
தாயான தன்மை தனைநினைத்தே யிங்கெளியேன்
நாயாய்க் குழைவே னயந்து. (10)

கண்கலங்கி மெய்ம்மறந்து கட்டழியும் வேளையிலே
வெண்கலங்கிண ணென்றொலிக்கு மீநாக்ஷி—பண்கலந்த
வேதநுவல் வாயால் வெருவே லெனவருளிப்
போதநுவல் கின்றேன் புரிந்து. (11)

பிஞ்சிகையா லெவ்வுலகும் பேதுறநின் றாட்டிமகிழ்
விஞ்சைதனை யானுணரேன் மீநாக்ஷி—நெஞ்சுருகிக்
கண்டளும்ப மெய்பொடிப்பக் கைகூப்பி முன்னிலைக்கே
தண்டெனவீழ்ந் தாலோ தயை. (12)

முன்னியற்றும் பின்னுழலு மூட மடநெஞ்சம்
மின்னியல்பூ ணாங்கறை மீநாக்ஷி—முன்னிலையா
லென்னுறவா மென்காஞ்சி யின்றுறைதேர்ந் தோதவருள்
உன்னும மொன்றே யுகந்து. (13)

கூறுநிலை யெற்பிழிநாற் கோலநிறை வீதிநதி
வீறுநிலை கூடனகர் மீநாக்ஷி—தேறுநிலை
நீயே யெனவுரைக்கு நீண்மறையி னந்தமெலாந்
தாயே கழல்பணிந்தேன் தாழ்ந்து. (14)

சொல்லியலு நன்மையெலாந் தொக்க வருட்கடல்சீர்
மெல்லியலாம் பிரமவித்தை மீநாக்ஷி—வல்லியமாம்
ஆணவந்தான் குன்றி யடங்கும் பெரியோர்க்குக்
காணவந்தா யுண்ணலமே கண்டு. (15)

பண்பா வெழுசுவையாற் பண்பாம் புகழ்பெயரை
விண்பார் மகிழ்ந்தேத்து மீநாக்ஷி—கண்பாராய்
வல்வினையாம் பேரலைக்கே வாளா வெழுந்தழுந்திப்
புல்லறிவா னெய்ததேன் புகுந்து. (16)

பூதத்துண் மண்ணதிகம் மண்ணிற் புனலதிகம்
மீததற்கு மேல்மேலா மீநாக்ஷி—யோதுமுறை
நெல்லுணவு வான்புருடன் நேர்வாக்கு மாமறையோம்
சொல்லுயரு மற்றதுநின் சுட்டு. (17)

அற்புதம்பல் காலுறமு வஃதடங்கா வான்றிரளை
வெற்பதன்கண் மெய்ந்நிலைசேர் மீநாக்ஷி—பொற்பமரும்
அற்றை மணங்கண்டா ரன்றோர்க் கொருவனென
வெற்றைச் செணப்படுவேன் யான். (18)

பேதந் தவிர்மிடற்றான் பீடையொழி மிடற்றான்
வேதம் புகழ்மிடற்றான் மீநாக்ஷி—யேதமிலா
மைம்மிடற்றான் பாக மகிழ்ந்தாய் புணையன்றிக்
கைம்முடவற் காமோ கதி. (19)

கண்டா ரிருளகலக் காந்தியருள் வீசிநிறை
விண்டாரை நேர்வாயின் மீநாக்ஷி—கொண்டாடும்
மூலலிங்க வானுருவ முற்றும் பணிந்தவர்க்கெக்
காலுமெங்கு முண்டோ கவல். (20)

எட்டாம் படிகடந்தா னெள்ளளவும் பற்றின்றி
விட்டா னுளமகிழு மீநாக்ஷி—பட்டாருங்
கெட்டாரும் விட்டாரும் கேட்க வினிதருள்வாய்
மட்டாரு மில்லா வணம். (21)

காலுண்டு நீராடிக் கானலைந்து நீள்குகைபோய்
மேலணிநீ றியாதுபயன் மீனாக்ஷி—யாலமுகு
வெய்யரவ மீன்கடுவாய் வெள்ளெலிகா யுற்றனவோ
மெய்யறிவை யில்லாமை வீண். (22)

பால்வடியும் வாயான் பரஞான சம்பந்தன்
மேல்பொருள்பாய் பாவிரும்பு மீனாக்ஷி—சால்பிடித்துக்
கொஞ்ச மிளங்குழந்தை கோல முகநோக்கி
யஞ்ச லெனவுரைப்பா யாங்கு. (23)

போம்வெளியின் மீண்டுபுகும் பொற்பரற் சிறையன்னம்
மேம்பெயரே மந்திரமா மீனாக்ஷி—யோம்படையால்
மித்தை வலைநீங்கி மேல்யோக முற்றார்க்கு
முத்திநெறி காட்டு முதல். (24)

மாணிடைக்கும் பிங்கலைக்கும் மன்னுமிடை பேரொளிசூ
வேணிசங்க மங்குலவு மீனாக்ஷி—பேணவருள்
கேதாரங் கங்கைமணி கர்ணிகையுங் சேழ்வரையும்
ஆதார மாத லறிந்து. (25)

உள்ளிருக்கு மாமணியை யுள்ளவகை காட்டுமுரு
வெள்ளெருக்கு வேணியன்பான் மீனாக்ஷி—கொள்ளலையேல்
ஞானம் வெளிப்படுமோ ஞால முயுக்திறமோ
பானை விளக்கொளியே பார். (26)

நீணெருப்பு தானடங்க நெய்சொரிதல் துய்ப்பதருள்
வேணவா வோயுமெனல் மீனாக்ஷி—பூணரிய
நற்றுறவே யுற்றதுணை நானிலத்துக் கோலமமர்
மற்றுறவா லென்னபயன் மண். (27)

சஞ்சலத்தாற் புல்லறிவாற் றூழ்வினைசெய் பேதைமையால்
வெஞ்சலத்தா லுள்ளுடைந்தேன் மீனாக்ஷி—மிஞ்சலெத்தால்
முன்வகுத்த வாறமையு மென்னு முறையுணரா
வென்முகம்பார்த் திப்போ திரங்கு. (28)

வாய்ந்தகுரு வின்மொழியே மாயை யொழிக்குநிம்பம்
வேய்ந்துலகு தானடத்து மீனாக்ஷி—ஆய்ந்தரசென்
அம்மொழியே நின்னுருவ மாதலினு னின்னையன்றி
மம்மரற வுண்டோ மருந்து. (29)

பொன்னிற் பலகாற் பொலிந்துமணம் வீசமுகார்
மென்கொன்றை மாலையணி மீநாக்ஷி—தென்கூடல்
செங்கோல் செலுத்தித் திறல்கொண்டாய்க் காட்பட்டால்
எங்கே யிருந்தாலு மென். (30)

செந்நீர்க்குத் தூய்மை சிறந்தவில்லை முண்டாக்கு
மென்னீரின் மெல்லியலா மீநாக்ஷி—யுன்னாமம்
நண்ணிட வாக்கு நயமில்லாப் பேதைகுணம்
என்னீர வேறு மிழுக்கு. (31)

கேடெத்தால் வேறொன்றுங் கீழ்வினையா லிவ்வுலக
வேடத்தால் உள்மகிழ்மே மீநாக்ஷி—ஆடத்தான்
ஆட்டிவைத்தால் வேண்டுமே யம்பலத்தே தண்ணருளாற்
காட்டிவைத்தாற் காண்பன் கழல். (32)

ஆயிடைநற் பன்மணியை யண்ணனெடு வீதிவிற்க
வேயிடைவாண் முத்துவக்கு மீநாக்ஷி—பேயடையும்
வெய்யவிட மாடும் விமலன் றனையடைந்தாய்
மெய்யுணர்த லெப்படியு மேல். (33)

எண்சுமந்த நற்பெயரா னென்று மனமுருகி
விண்சுமந்த வேந்துதொழு மீநாக்ஷி—மண்சுமந்தும்
பந்தத்து நில்லாது பால்விடைமேல் ஏறிநின்றீர்
வந்தித்த வந்திக்கு வாது. (34)

கண்மணியை சொன்மணியைக் கற்பகத்தை வித்தைதனை
விண்மணியைத் தண்கதிரை மீநாக்ஷி—யுண்மணியைப்
பண்ணுறும் பாடற் பரிசறியு நின்வணங்கக்
கண்ணுறக் கண்டேன் களித்து. (35)

எண்ணியவை யெண்ணியவாங் செய்த லரிதாமோ
விண்ணிழியு மஞ்சமொளிர் மீநாக்ஷி—தண்ணளியால்
வற்றா வளநல்கும் வான்சங்கந் தான்தழைத்த
பொற்றா மரைத்தண் புனல். (36)

எண்ணீற்றி னீறா மிதன்பெருமை யென்னமறை
வெண்ணீற்றை யேபுகழு மீநாக்ஷி—ஒண்ணீற்றைப்
போற்றுமுறை யாற்பூசும் புண்ணியர்க்கிங் கேதுபயம்
கூற்றுவன்முன் கட்டுரைத்த கூற்று. (37)

மாளும் அழிக்கு வரையறையே யில்லையுயிர்
மீளும் வழிக்குமஃதே மீனாக்ஷி—கேளாத
மந்த னுலகுவக்கு மற்றையன்றே சொல்விடைவாய்
ஐந்தெழுத்தைச் சொல்லு மமர்ந்து. (38)

செம்பொருளான் மிக்கமறை செய்யமழ லைக்குமரன்
வெம்பொருள்சீ ராய்ந்துரைத்தான் மீனாக்ஷி—தப்பொருளாம்
பச்சைக் குழந்தையுரைப் பண்புகந்தீர் முத்தமிட்டீர்
விச்சைக்கே யேற்ற வியப்பு. (39)

பேதை வினையென்னும் போராற் றிடைக்குறைசேர்
வேதனையூ மென்றகலு மீனாக்ஷி—ஆதிநதி
காணும் வரைமகளாய்க் கண்ணுதலா னென்கயிலை
வாணனை மகிழ்மயிலே வாய்ந்து. (40)

செய்வினையா வில்லை செறிபயனா வில்லைநிறை
மெய்யுருவா வில்லையொப்பு மீனாக்ஷி—ஐயமுண்டோ
தாயாகி வேறுநின்ற தன்மையா லுள்ளுறைபு
நீயே யுவமை நினக்கு. (41)

சாணேற விங்கு முழஞ்சறுக்கித் தாழ்ந்தெளியேன்
வீணே கலங்கவோ மீனாக்ஷி—காணாதேன்
உள்ளத்தை யுள்ளவா ஓர்ந்தாய்க் குரைப்பதென
வெள்ளத்தைத் தாண்டும் வினை. (42)

கண்டுருகு நெய்யுருகுங் கல்லுருகு மண்ணுருகும
விண்டுருகு மெஃகுருகு மீனாக்ஷி—கண்டுருகா
தொன்றுண்டு கண்டா யுலகி லெளியனுளம்
நன்றுண்டு கொலலோவிந் நாய்க்கு. (43)

கால்மாறிப் பல்பிறப்புங் கண்கெட்ட வெற்குமுண்டோ
வேல்மாறன் பெணமணியா மீனாக்ஷி—கால்மாறி
மன்றாடு மண்ணனற்கு வாழ்க்கைப் படுமென்னே
மன்றாடி வேண்டின் வரம். (44)

கால்வா யரைவாய் கலையறிவில் யாரேனும்
மேல்வா யிலரேனு மீனாக்ஷி—காலாரக்
குங்குமத்தாற் சார்வார் குறைநீங்க குவரென்றோ
[illegible]க்கால் வெல்வா ரெதிர்த்து. (45)

சாந்த குணம்பொருந்தித் தண்ணீ ரினிதருந்தி
மீந்தவிளம் புல்லுணுமான் மீநாக்ஷி—மீந்தோலின்
மீதுட்கா ரந்தணர்தாம் மேன்மை யடைவரெனறும்
சாதுக்கள் சார்பே தரும். (46)

சிக்காமற் காப்பாய் செறியுடல மையமர்ந்து
விசகாமு னேத்துகின்றேன மீநாக்ஷி—சொக்காரும்
பால்வண்ணர் பாகம் பயிலுமையே யின்றொருகால்
நூல்வண்ண சால நுழைந்து. (47)

பாம்பணியும் பித்தற்குப பித்தந் தணிக்கவல்ல
வேம்பணியும் தின்னையலலான் மீநாக்ஷி—தாம்பணிந்து
கண்ணுதலை யாருங கருதுவரோ கற்புடைய
பெண்டிரால் வந்தடைந்த பேறு. (48)

தோண்டப் புனலூறும் சொல்லச் சுவையூறும்
வேண்டக் கவியூறு மீநாக்ஷி—பூண்டவன்பி
னெஞ்சூற வூறு நினைக்கரிய வானந்தம்
அஞ்சூற வூறு மது. (49)

நெஞ்சமர வுள்ளி னிறைமறலி தூதுவர்தம்
வெஞ்சமரி லஞ்சலுண்டோ மீநாக்ஷி—எஞ்சலிலா
வாளுங கதையு மழுப்படையுந் தோமரமும்
நாளுந் தொழுதேதா னா. (50)

தானென் பதும்பொருளுந் தக்க விலக்கணையான்
மீநெறிக்கே செல்லுமெனப மீநாக்ஷி—நானனையேன
மேதை பெலும்புதிரம் வெள்ளைநரம் பியானென்பேன்
பேதையுரை யெல்லாம் பிதற்று. (51)

கேண்மோ மதியில்லாய் கெட்ட வினிப்போதும்
வீணமோக நீங்கியுய்யை மீநாக்ஷி—தாண்மேலே
எல்லையிலா தன்புவைக்க வென்றுங குறையில்லை
தொலலைவினை துய்த்தே தொலை. (52)

மல்லல் வரைமகளே மன்னுசுடர் சுற்றுமலை
வில்லன் பரஙகாண மீநாக்ஷி—பல்வகைநீ
நோற்றதே நோற்பா நுவலின் வரனவனே
ஏற்றபயன் நோற்பே இடும். (53)

ஏழை யுளவயலை யேற்ற மதியென்னு
மேழியினா னன்குழுது மீனாக்ஷி—யாழுமன்பாம்
நீரைந் தெழுத்திட்டு நீள்சிவமா மோங்குபயிர
பாரெங்கு நெல்லாம் பரந்து. (70)

கோடி யிளங்கதிர்தாங் கூடி விளங்குமையே
வேடுருவாய் வந்ததொன்றோ மீனாக்ஷி—நாடரிய
அண்ணறனை வில்லா லடித்தான் பிழைபொறுக்க
எண்ணாருஞ்சொல் ஓதினா யேற்று. (71)

கூடுமைவர் கூட்டுறவாற் கூறு மறநெறிக்கே
மேடுபள்ள மொன்றறியேன் மீனாக்ஷி—கூடனகர்
ஆண்டாய் எளியநெஞ்சை யாள்வாய் ஒளிர்தாளம்
பூண்டாய் நினதாள் புணை. (72)

ஓடுசா லல்லா விருகரையு மோங்குவெள்ளம்
வீடுகால் வெற்பிலையே மீனாக்ஷி—நீடுகால்
பாவெள்ளத் தூயோர் பகர்தமிழை யோர்ந்தவைகை
தூவெள்ள மோடிவரச் சொல். (73)

கொஞ்சுங் குலவுங் குதித்தோடும் விற்பாயும்
மிஞ்சுஞ் சுவைபொழிபு மீனாக்ஷி—புஞ்சமறைச்
சம்பந்தன் வண்டமிழின் றன்மை நிறைவைகை
அம்புதிபோற் பொங்கிடவே யார்ந்து. (74)

அம்மே யெனும்வா யசையுமுன்னே யங்கிருந்து
விம்மே லெனவருளு மீனாக்ஷி—இம்மையே
நன்மை தருவாய் நயந்தவர்க்குத் துன்பமுண்டோ
நன்மையே நன்மைதரு நன்கு. (75)

வானொக்கு மாலை வணமுயர்பொற் கொன்றையொக்கு
மேனியன்செம் பாகமகிழ் மீனாக்ஷி—ஆனவுண்மை
சங்கையற்றார் பொய்ப்புலனைச் சார்வரோ தூய்மைமிக்க
கங்கையுற்றார்க் கங்கணமோ காண். (76)

ஒற்றிகொண்டாற் கொண்டாய் உலகமெலாங் கூடனின்று
வெற்றிகொண்டாய் மேன்மைகொண்டாய் மீனாக்ஷி—நிற்றிகண்டாய்
மற்றழியும் வேளையிலே மன்னுபரன் றன்னுடனே
(77)

ஆழ வுணர்ந்தடங்கி யாங்கார மென்னுமத
வேழமதை மாய்சிங்கம் மீனாக்ஷி—யேழுலகும்
கண்டார் நடுக்கமுறார் கைதொழுவார் ஈதன்றோ
மண்டேனின் ஞானத்து மாண்பு. (78)

முன்னறியேன் பின்னறியேன் முற்ற முழுமூடன்
மின்னெறிக்கும் பூணணியு மீனாக்ஷி—யென்னுரைக்கேன்
வீட்டிச்சை பந்தம் விளைக்குமேற் சங்கற்பக்
கூட்டிச்சை யோகோ கொடிது. (79)

சண்டிக்குந் திண்ணற்குங் கண்டற்குந் தக்கவிறன்
மிண்டற்கு முத்தியருள் மீனாக்ஷி—திண்டிறன்மெய்ஞ்
ஞானமன்பு தூய்மை நலமில்லே னுய்தலெற்றோ
கானவன்பா லுண்டோ கனி. (80)

சித்தத்தை யுன்பாற் செலுத்த மருளுலகம்
மித்தையெனு நுண்ணுர்வா மீனாக்ஷி—புத்தமுதம்
பன்னிரண்டைத் தாண்டிப் பனிமதிபா லுற்றார்க்குப்
புன்னரக மாமோ புகல். (81)

ஏழிசையா லின்பெயரை யேற்றிப் பருந்துயர்ந்து
வீழிசையா லுள்ளமகிழ் மீனாக்ஷி—தாழிசையா
னேரிசையாற் சங்கத்தார் நின்னைப் பணிந்துயர்ந்தார்
ஆரிசையா லுள்ளுருகா தார். (82)

வேதியிலே பித்தத்தை வீட்டினரை முச்சந்தி
வீதியிலே விட்டுவிட்டாய் மீனாக்ஷி—தீதறத்தான்
கங்கையிலே மூழ்கவிட்டாய் காணிற் கருணையன்றோ
செங்கையிலே நீயுற்றார் சேர்பு. (83)

தானே தனிமுதலாந் தாணுலிங்க மன்விளங்க
மேனுகரு மின்பமுற்றேன் மீனாக்ஷி—யானமறை
யோதிப் பரவசமாய் உள்மகிழ வந்தணைந்தா
பூதிப் பிடியளித்தான் போந்து. (84)

கண்ட மழலிங்கம் கள்ள மனங்கவர
விண்டதே மேல்வினைதான் மீனாக்ஷி—கொண்டதேன்
செங்கரும்பு பாலாட்டிச் சீருற் றொளிவிளங்கக்
கொயகரும்பு மாலையுடன் கூர்ந்து. (85)

நீரிட்டும் வெய்ய நெருப்பிட்டுந் தாவில்சீர்
வேரித் தமிழ்புகழு மீநாக்ஷி—பார்தொட்டுக்
காலடங்கி விண்போங் கடுங்காவ லென்றுவிடும்
நூலடங்கா வன்னே நுவல். (86)

மேலை யறியார் விரும்புமய லிவ்வுலக
வேலை பழுதன்றோ மீநாக்ஷி—சாலவுறு
வாழ்க்கைப் பயனென்னும் மாய்பனிவாய் பைங்கூழே
வாழ்த்தவரும் செங்கதிரின் மாண்பு. (87)

ஆம்பிணிதா னுயிரநா ளாழ்ந்து மகற்றுநில
வேம்பன்றோ நீள்வினைக்கு மீநாக்ஷி—தாம்பணிவார்
மேலோங்குந் தன்மை மிகத்தெளிவாம் சிற்றுயிர்க்கும்
நூலோங்க ணுரை நுணல். (88)

நாடி வகையுணரு நாடு நகைசெய்யும்
வீடுகட்டு தேர்ச்சியுண்டு மீநாக்ஷி—ஓடுமியல்
வாசி நிலைநிறுத்தும் வண்ண மிகத்தீட்டும்
காசியுள்ளே காணுங் கவி. (89)

பெற்ற பயனிற் பெரிதன்றோ பேசுங்கால்
வெற்றுடல்வாழ் செல்வமுற்றேன் மீநாக்ஷி—வெற்றுரைகேள்
கூன்மாறற் குற்ற கொடுவினைதீர் கோநகரா
நான்மாடக் கூட னயந்து. (90)

நேத்திரத்தாற் காண்டுமென்பார் நேருந் திரணொருக்கம்
வேத்திரத்தா னந்திதள்ள மீநாக்ஷி—மாத்திரத்தார்
நான்மறையி னுயகமாய் நாப்பண் ஒளிர்பகுதி
தான்முழங்கு மாக்கயிலை சால்பு. (91)

மேலை வினையலையா மீளும் பிறப்பிறப்பு
வேலைமயல் கள்மயக்கா மீநாக்ஷி—கோலமுறு
காட்சி கனற்புனலாங் காம மரவெயிறாம்
ஆட்சிசெயு மைவர்க் கரண். (92)

போதப் பொருளெய்தப் பொய்யா வமுதமழை
வேதத்தின் வேறில்லை மீநாக்ஷி—ஆதித்தன்
மேலொளிக்கு நேருண்டோ மெய்யுணர்வை யில்லேற்குந்
[illegible] (93)

பேச்சினாற் பொய்மை பிடியடங்கா . _ண்மை
வீச்சினா லுய்திறமோ மீனாக்ஷி—மூச்சினா
லேறலா மோரா யிரமீ ரயுதமொடு
நூறறுகான் மேன்மை நுவன்று. (94)

போற்றுகுரு வின்னுரையாற் போதப் பொருள்விளங்கும்
மேற்றெரிய வொன்றில்லை மீனாக்ஷி—சாற்றுமறை
காண்குருவே சாக்குங கடவுள் வடிவமென்னின்
மாண்குருவாந் தாயே வழி. (95)

போற்றினா லான்மாவைப் புண்ணிய னாகின்றான்
வேற்றுமை தானொழிந்தான் மீனாக்ஷி—தோற்றமுடி
வற்றான் அளவிறந்த ஆநந்த மேயுற்றான்
பெற்றான் பெறற்கரிய பேறு. (96)

தன்னை மறந்தெதையுந் தானாய் விளங்குதற்கு
வென்னிடமே மற்றையின்ப மீனாக்ஷி—முன்னரிய
நன்றே பரம்பொருளே நன்மையெலாஞ் சேர்ந்தகுணக்
குன்றே யெனையாள் குறித்து. (97)

மாணும் பிரமவித்தை மன்னுபுர சுந்தரியே
வேணுவிசை யின்மொழியாய் மீனாக்ஷி—பூணும்
சிவகாமி செய்ய வபிராமி ~~[illegible]~~ செல்வ
அவிநாசி யன்னே யருள். (98)

உள்ளம் பிரமபுர மோர்தகர புண்டரிகம்
வெள்ளிமன் றாடிமகிழ் மீனாக்ஷி—கள்ளவிழும
பொன்கொன்றை சூடும் புராரி யிடமமர்ந்தாய்
நன்கொன்றை யீவாய் நயந்து. (99)

ஆமிசைவாய் நற்புலவர் ஆநந்தங் காப்பமற்று
மீமிசைவாய் பேதையுரை மீனாக்ஷி—தாமிசையு
மன்பா னுளறியசொ லஞ்செவியி லேற்குமென்றே
யுன்பாத முற்றேன் உகந்து. (100)

திருச்சிற்றம்பலம்.

Printed at the National Press, Bangalore.

உ

வேலுமயிலுந்துணை.

மதுரை மீனாட்சியம்மை மீது

# சந்தத்திருவடி மாலையும்,

# திருவடிப் பத்தும்,

சோழவந்தான்

# சிதம்பரவிநாயகர் மாலையும்.

இவை

சோழவந்தான் வித்துவான்

## அ. சண்முகம்பிள்ளையவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை

மு. ரா. கந்தசாமிக்கவிராயரால்

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றன.

1914.

உ

குமரன் துணை.

# முகவுரை

மதுரையைச் சார்ந்த சோழவந்தானூர் வித்துவான் ஸ்ரீமத் அ. சண்முகம் பிள்ளையவர்களைத் தமிழ்நாடு நன்கறியும். இவர்கள் தமிழிலக்கிய இலக்கணங்களிற் றேர்ச்சி மிக்கவராய், எல்லாப்புலவர்களும் மிகவருந்திச் செய்யப்பெறுதலால் மிறைக்கவி யெனப்பெயர்பெற்ற சித்திரகவிகளை அதிசுலபமாக இயற்றும் பேராற்றலுற்றவராய், எந்த விஷயங்களையும் தருக்கமுறை பிறழாமலும் அவையஞ்சாமலும் கேட்போர் வேட்குமாறு இனிதெடுத்துரைக்கும் சொல்லாற்றல் படைத்தவராய் விளங்குகின்றார்களென்பதை இப்போதுள்ள தமிழ்ப்புலவர்கள் யாவருமுணர்வர்.

"இன்னிசை யிருநூறு" என்ற நீதிநூலொன்றும், "மாலைமாற்றுமாலை" என்ற சித்திரகவி நூலொன்றும் இவர்களால் இயற்றப்பெற்று முன்னமே வெளிவந்துள்ளன. இவற்றுள் மாலைமாற்றுமாலைக்கு யாமே உரையெழுதி வெளியிட்டுள்ளோம். மேற்கூறப்பெற்ற இருநூல்களையும் பார்த்த தமிழ் வித்துவான்கள் பல்லோர் அவற்றின் அருமை பெருமைகளைப் பாராட்டி எமக்கு வரைந்துள்ளார்கள்.

இப்பொழுது இந்த வித்துவ ரத்தினமாகிய நமது பிள்ளையவர்கள் மதுரை மீனாட்சியம்மை மீது "சந்தத்திருவடிமாலை" என்னும் பெயர் புனைந்து யாத்த சந்தப்பாக்கள் 32-ம் அவற்றிற்கு அவர்களே யெழுதிய குறிப்புரையும்; "திருவடிப்பத்து" என்னும் பெயரிட்டியாத்த பத்து வெண்பாக்களும்; தமது பிறப்பிடமாகிய சோழவந்தான் "சிதம்பர விநாயகர்மாலை" என்னும் பெயரிட்டியாத்த 30 கொச்சகப்பாக்களும் ஒருங்கு சேர்த்து அச்சிட்டு வெளியிடப் பெற்றுள்ளன.

# முகவுரை.

சந்தத்திருவடி மாலையில் சந்தம் நோக்கி சொற்களை நீட்டல் குறுக்கல் தொகுத்தல் விரித்தல் ஆகிய விகாரப்படுத்தாமல் விழுமிய பொருள்பயக்கும் முழுமுழுச் சொற்களாகவேதொடுத்துள்ளார்கள். சந்தம் அமைத்து அதற்கியையச் செய்யுளியற்றுதல் விலங்கிட்டுக் கொண்டு நடனமாடுவதை யொப்பதொன்றாகவும் இச்சந்தப்பாக்கள் ஆக்கியோர் கருதிய பொருட்போக்குக்குச் சிறிதும் முட்டுப்பாடுறாது செவ்விது செல்லுந் தன்மையனவாக அமைந்துள்ளன. இந்த நயத்தை ஊன்றியுணர்வா ரெவரும் வியவாதிரார். அன்றியும், நகர் வருணனை, வையைநதி வருணனை, தண்ணீர்க் குழாய்கள், மின்சார விளக்குகள் ஆகியவற்றின் வருணனைகளும் நன்கு அமைந்துள்ளன. அம்பிகைமீது இத்தகைய சந்தப்பா நூலொன்று இதுகாறும் யாமறிந்திலம். ஆதலின் எமது பரமமாதாவுக்கு வாய்த்ததோர் நவமணிபணியாகவே கொண்டு தமிழ் மக்கள் மகிழ்வாரென்பது எமது துணிபு.

ஏனைய இருவகை நூல்களும் பிள்ளையவர்களின் பத்தித் தன்மையை மிக்கு விளக்குவன வாதலுடன் சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பப் பெற்றுள்ளன. இவர்களியற்றிய ஏகபாத நூற்றந்தாதி யுரையும் விரைவில் வெளிவரும்.

சர்வலோக மாதாவாகிய ஸ்ரீ மீனாட்சியம்மை திருவருளாற் பிள்ளையவர்கள் அரோக திடகாத்திரராய் எல்லா நலன்களையும் பெற்று இன்புற்று வாழ்வார்களாக. இப்புத்தகம் வேண்டுவோர்க்கு இனமாகவே கொடுக்கப்பெறும். சுபம் சுபம்.

இங்ஙனம்,

மு. ரா. கந்தசாமிக் கவிராயர்,

மதுரை.



# சாற்றுக் கவிகள்.

---

மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீன வித்துவானும்
ஸெயிண்டுமேரி ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய ப்ரும்ம

## மு. கோவிந்தசாமிஐயரவர்களியற்றிய

### செய்யுட்கள்.

திருவளரும் பாண்டிவள நாடாளும் வழுதிகுலஞ்
சிறக்க நீதி
யுருவளர வுலகையெலா மொருகுடைக்கீழ்ப் புரந்தருள
வோங்கன் மன்னன்
கருவளரா தவதரித்த வங்கயற்கண் ணம்மைதிருக்
கஞ்சத் தாளில்
மருவளரும் பூமாலை யெனச்சந்தப் பாமாலை
வனைந்தான் மன்னோ. (௧)

அன்னவன்றன் யாவனெனி லைந்தியலுங் காப்பியமு
மளந்து கற்றோன்
மன்னவரி னவைமுந்தி யிருக்குமொரு சீருடையான்
வையம் போற்றச்
சொன்னவமர் மாலைமாற் றாகிய நூல் பலநவின்றோன்
சுருங்கச் சொல்லின்
துன்னவரும் வாரியுண்ட முனிநிகர்வான் சண்முகனென்
சுமுகன் றானே. (௨)

கண்டமுத முதலாய தித்திக்கும் பொருளனைத்துங்
கலந்தாற் போலப்
பண்டருணை கிரிநாத ரருள்வெள்ளத் தாழ்ந்துரைத்த
பாவி னங்கள்
கொண்டசுவை யனைத்தையுநன் காய்ந்துசிறப் பேய்ந்தவையைக்
கூட்டி யந்த
அண்டர்பிரா னன்னையடிக் களித்தானென் றுரைப்பதலா
லறைவ தென்னே. (௩)

## சாற்றுக்கவிகள்.

### கோயிலூர் ஆதீனம் ஸ்ரீமத்
### சுப்பையா சுவாமிகள் இயற்றிய
### செய்யுள்.

என்னையீன் றருளு மிருந்தயை விருந்து
ணெழிற்கயல் விழித்தனிக் குமரி
அன்னையா ரடியி லரசஞ்சண் முகவே
ளற்புதத் திருவடி மாலை
தன்னையே யருச்சித் தணிந்தனன் வணங்குந்
தனயருஞ் சுரர்களுந் தவரும்
பின்னையே முதல மாதரும் பிறரும்
பிறங்கிய முடிக்கொள மாதே.

---

### மதுரை வித்தியாபாநுப் பத்திராதிபர்
### மு. ரா. கந்தசாமிக்கவிராயர்
### இயற்றிய செய்யுள்.

தருவளா சனகைப பதியும்மன் னுளமுஞ்
சார்ந்துவாழ் சண்முக நாமத்
தொருபெரும் புலவன் அங்கயற் கண்ணி
யுளமுவந் தணிதரச் சந்தத்
திருவடி மாலை திருவடிப் பத்துஞ்
சிதம்பர விநாயகர் மகிழ
மருவுமோர் மாலை தனையுநன் கிசைத்தான்
மற்றவன் வாழிய மகிழ்ந்தே.



உ

தேவிதுணை.

617

# மதுரை மீனாட்சியம்மை

# சந்தத் திருவடிமாலை.



தனன தந்தன தான தானன
தனன தந்தன தான தானன
தனன தந்தன தான தானன — தனதானா.

உலக மெங்கணு மூழி வானவர்
உரக ரும்புவி யோரு மேவல்செய்
உயர்பெ ருந்தனி யாணை யேசெல — ஒருகோடி
உழுவன் மங்கையர் காம னேயென
உடல்கு ழைந்திருள் யாம நாலினும்
உவகை கொண்டணை போக மேகொள — ஒருவாதே

பலரு மன்பொருள் காலை தோறும்வை
பவமு டன்பெற நாளு மேமதி
பளகி னுங்கலை யாய வாழ்நிலை — படைசேய்சீர்
பலபொ ருந்தினு மேயு ளதருள்
பரவு மன்பிலை யேலெ னுமது
பரவி முன்பெற நாடி யேயடி — பணிவேனே

நில வெங்கண ராவி ராவிய
நெடிய செஞ்சடை தாதை போலுரு
நிமல வைங்கர னார்வி நாயகர் — நினையாதே
நினைவின் வந்தெனை மேவு நாயகர்
நெறியி னைந்திடு காலை யாழ்துயர்
நிலைகு லைந்திட வாழ்வு தானருள் — நிதிபோல்வார்

குலவு மொண்கலை யாவு மேயுணர்
குமர ரிங்கிவர் பால ராவளர்
குமரி சங்கரி தேவி யாமளை — குலமாதா

## மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

குடிகொ டென்குடி யாள நானுறு
குடில நெஞ்சினு டேவு நாரணி
குயின்மு ழங்கிடு கூடன் மாநகர் உமையாளே.

(குறிப்புரை) உழுவல் - எழுமையுந் தொடர்ந்த அன்பு. மன் - மிகுதி மளகு - குற்றம். அது - அன்பு. தாதை - சிவன். நெறி - நல்வழி.

உலக மெங்கணும் ஊழிவரை ஆணைசெல்ல மங்கையர் போகங்கொள்ள பலரும் மன்பொருள் பெற மதிகலையினையாய வாழ் நிலையும் படையும் சேயும் சீரும் பிறபலவும் பொருந்தினும் அன்பிலையாயின் என்னும்! ஆதலின் அது பெறப்பணிவே னெனமுடிக்க. (௧)

தத்தன தனதன தான தந்தன
தத்தன தனதன தான தந்தன
தத்தன தனதன தான தந்தன தனதானா.

ஒத்துறு வளிநிலை தேய்த லின்றியுள்
மத்திய சுழுனையி னூடி சென்றிட
உய்த்தொளிர் மதியமு தார வுண்டுடல் அழியாதே

உட்பகை கருமமு மூணு றங்கலும்
விட்டிரு வினையிருண் மாயை வென்றுளிர்
உத்தமர் தமதருண் மோன சிந்தையொ டொழியாதே

நித்தமும் வனிதையர் காதல் கொண்டவர்
முத்தெனு மெயிறுறு பான முண்டயல்
நிற்றலை மகிழ்மெ னீன சிந்தையும் ஒருநேரா

நிற்குமு னொளிதிகழ் பாத பங்கயம்
நித்தில மணியன நேய வொண்கவி
நித்தமு மிசையொடு பாடி வந்தனை புரிவேனோ

வித்தையொ டுறுபொரு ளாயுண் மைந்தரும்
முத்தியும் விழைமயினு மீயு மொய்ம்பினை
வெற்றிகொள் பரசுடை வீரி யந்தரி விடையூர்வான்

மெய்ப்பொருள் பரசிவன் மேனி பங்குகொள்
உத்தமி பகவதி வாலை யம்பிகை
வித்தகி நிருமலை வேத புங்கவி விதியோடே

சித்தர்கள் வழிபடு தேவி சுந்தரி
சத்திபொன் மலைசுதை தாய்ப ரம்பரை
தெற்கிறை மகளென மேவு குண்டலி திரிசூலி
திக்குட னருவுரு கால மம்புவி
சத்தமொ டிசைபொரு ளாய சங்கரி
சிற்பரை தமிழ்வளர் கூட லம்பதி உமையாளே.

(கு-ரை) வளி - இடை கலை பிங்கலையி லியங்குங்காற்று. தேய்தல் - கால் விரல் கழிதல். இருள் - ஆணவ மலம். தெற்கிறை - தென்னவன், மலையத்துவசன். (உ)

தனனத் தனதன தத்தனந் தானன
தனனத் தனதன தத்தனந் தானன
தனனத் தனதன தத்தனந் தானன தனதானா.

மதியிற் பணிபல சுற்றிமந் தாகினி
மறையச் சடிலமு டித்தநஞ் சார்களன்
வளைசக் கரமுற மத்தனம் போருகன் இருவோரும்
வலிதிற் பிலநப முற்றியுங் காணரு
மலர்பொற் பதமுடி நித்தனைந் தானனன்
மணவற் புதவினை முற்றுமங் கேசிலை யதன்மேலே
பதியச் செயும்வகை பொற்புறுங் கூடலின்
ஒருதிப் பியநில யத்தின்வண் பாரினர்
பணிவிட் பதியினர் பெட்பொடுங் காணுற இரவோடு
படர்பொற் காமலர் பற்றிமுன் பூணுற
அடல்பொற் பணிமுடி வெற்றிசெங் கோலொடு
படைபற் பலதரு தக்கநின் றண்மலர் பணிவேனோ
நிதிபொற் கிரிதனை யெற்றுசெண் டாலடி
கொடுமுற் பெறுமொரு துட்டர்தங் காலனை
நெடிதுற் றெழுகடல் வற்றவென் றனைவிண் முகிலூர்வான்
நினைவற் றிடமுடி தத்திமுன் போய்விழ
வளைவிட் டெறியயில் கைக்கொளுஞ் சீலனை
நிலைமுத் தமிழொடு பெற்றவம் பாலிகை நினையாதென்

மதியிற் றிகழ்பரை துர்க்கைகங் காளியென்
வறுமைப் பகையற வெற்றிதந் தேழ்நிலன்
வசையற் றிடுதமி ழெற்கலந் தேதரு திருமாதா
மதியைத் தொடுபுரி சைத்தடங் கோபுர
மதுரைப் பதியின்மு ளைத்தநந் தாவொளி
மலயத் துவசன்வ ளர்த்தசிந் தாமணி உமையாளே.

(கு-ரை) நபம் - ஆகாயம். அங்கு - அம்மி மிதித்தல் செய்யுமவ்விடத்து. சிலை - அம்மிக்கல். இரவோடு - இரத்தலைச் செய்த பிரம கபாலம். அடிகொடு - அடி கொடுத்து என்னும் பொருட்டு; வரிப்புனை பந்து என்புழிப்போல. ஏழ் நிலன் - பாட்டு, நூல், வாய்மொழி, உரை, பிசி, அங்கதம், முதுசொல் என்பன.

அத்தன் பில முற்றிக்காணருபத மெனவும், அம்போருகன் நபமுற்றிக் காணரு முடி யெனவும் நிரனிறை கொள்க. ஐந்தானன், மணவினை முற்று மங்கு, சிலை மேல் பதியச் செயத்தன் கரமலராற்பற்றிப் பூண அவற்குப் பல தரு நின்றாண் மலரென முடிக்க. சண்டாலடி கொடுத்து நிதிபெற்ற துட்டர் காலனென்க.

தனனத் தனதன தானத்த தந்தன
தனனத் தனதன தானத்த தந்தன
தனனத் தனதன தானத்த தந்தன தனதான.

அறிவிற் பெரியரென் மானீத்த வண்டர்கள்
அருள்பெற் றுரைகவி யாலார்ப்ப வின்பெனும்
அழிவற் றிடுமுயர் தேன்வார்த்து நன்கலை நிறைதூய
அதிநுட் பமதியி னேராக்க வின்றெளிர்
அலரிக் கிரிதலில் பேதார்த்த மொன்றிருள்
அகலக் கடிதுற லோடாத்தர் துன்பினை அறமோதி
மறியுற் றிடுகர னார்வாய்த்த சிந்தனை
மறைநத் துறுதட நீர்பூத்த வம்புய
மலர்நற் றிருவடி மால்வாய்த்த வென்சிலை மனமீதும்
வருதற் கமர்குவன் யானேத்து மன்பிலன்
வளரத் தருகிக வாய்சாற்ற வின்றியும்
வலிதிற் கருணைசெய் தாய்போற்ப ரிந்தருள் புரிவாயே

தறியிற் செறிபரன் வானோர்க்கு நன்றது
தராமுற் றிரிபுர நீறாய்க்க ரிந்தெரி
தாவுத் தரகிரி நாணாத்து முன்றனு வெனமேவு

தனிரிற் றிகழ்கர மானேய்த்த வங்கணி
சடையைத் திரைசிலை தோல்போர்த்தி ரந்தலை
தனியற் கணிமுடி பார்சேர்த்த பொன்கலை தருதேவி

வறியற் கருள்செயு மாதாத்தி கம்பரி
வளர்முத் தமிழினை யானேற்ப முந்தருள்
மலைபெற் றிடுமொரு கார்போற் றிகழ்ந்தொளிர் குழலாளே

மலயத் துவசனை வாணுட்டி னின்றான்
மருவித் திடவருள் கோமாட்டி வண்பொழின்
மதுரைப் பதியுறை மீனாட்சி யம்பிகை உமையாளே.

(கு-ரை) வண்டர் - வண்டு. அர் - சாரியை. மால்நீத்த அண்டரென வும் பிரிக்க. அண்டர் - அறிவாற்றேவருக் கொப்பாயவர். அலரி - சூரியன். நார் அன்பு. நத்து - சங்கு, நத்துதல். சிலை - கல். தறி - நடுதறி. உத்தரகிரி - மேருமலை. தனியன் - சிவன்.

பெரிய ரென்ற வண்டர்களரர்ப்ப இன் பெனுந்தேன் வார்த்து அப்பெரி யாரது கலைநிறைந்த மதியின் எதிராகக் கவின்று அலரிக்கு இரிதலில்லாத அஞ்ஞான விருளகல அவர் மதியிற் கடிதுறவோடு துன்பினை மோதி, மறிகக ரனது சிந்தனை யென்ற தடாக நீரிற் பூத்த அம்புயமல ரென்ற நின்னடி யெ னவும், மறை யென்ற சங்குகள் சூழ்ந்த தடாகம் எனவும் மறை விருப்புற்ற தடாக மெனவு முரைக்க. (ச)

தான தத்ததன தான தத்ததன தான தத்ததன தானன
தான தத்ததன தான தத்ததன தான தத்ததன தானன
தான தத்ததன தான தத்ததன தான தத்ததன தானன தனதானு.

ஆதி முத்தரிட மாமு டற்பகுதி
நீயி ருத்தலின்மு ளினில்
ஆகு லச்சமினை மாணி டக்கழலி
ளுைதைத் துயிலை மோதினர்
ஆய டிப்பெருமை தானு முற்றறிவ
ராத விற்றெரிகு வாரவர் அறிவாரோ

சீ மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

ஆழ முற்றகிண றேய்சி றுத்தவனை
பார்கி ணற்றனவெ னீர்மையின்
ஆசை பற்றியுணர் பேயர் சித்தர்முனி
வோரு மப்பெருமை யோர்தலின்
ஆயு முத்தியினு மூவ கைக்குளொரு
தேக சித்திகொடு தூயநின் அடிபேணி

ஓது தெற்கிறைவ ராம னுற்றிடுவ
ரூழி பற்பலவு மீதுமெய்
யோகி னப்பதும பாதம் வைத்துமன
மேம னைத்தெறுத லோர்கிலர்
ஊக தத்துவக லாச முத்திரம
தாடி வற்கலையொ டார்சடை டையோராய்

ஊர்கள் பற்பலவு நீர்கள் பற்பலவு
மோடி யுற்றுமெவன் மாய்குவர்
ஓரி னெத்தனைசெய் தாலு மத்தனையு
நீரெ ழுத்தனைய நீர்மைய
ஓகை யுற்றுயின தாணி னைத்தெருமை
யூர்தி கெட்டொழிய வாழ்தலை அருள்வாயே

வீதி யொற்றைவழி யோடி ரட்டையுருள்
வேறு மப்பினுறு மாவியின்
வேக முற்றவுருள் வான்மி னுய்த்துநிறை
சார முற்றவுரு ளாதியும்
வேறு பற்பலசு வாதி யுய்ப்பனவும்
வாயு விற்கடிய வேகமொ டொருவாதே

மேவ விற்பகலின் வீணை யுற்றவிசை
யாதி முத்தமிழி னோர்கவி
வேறு பற்பல்வகை நாத மத்தனையு
மாதி யிற்பரிசின் மேவுற
மீள வுய்க்குமொலி கால்வ வுய்க்குமிசை
மாடி யிற்செவிப டாமையின் நிசிவேளை

மீது நெய்த்திரிக ளாதி யற்றவொளி
சூரி யற்குநிக ராயுற
மேவி மக்கள்பலர் காதி னுய்த்துமகிழ்
போதி ருப்பினியல் வார்குழல்
வீழு மப்புகொடு போது மைக்குழலி
னுரு மொய்த்துமகிழ் கூடலின் ஒளிர்கோயில்
வேத வித்தகரு மாதி முத்தமிழை
யாயும் வீற்பனரு மோர்புடை
வேய்நி கர்த்தபுய மாதர் மக்களொடு
கூடி நிற்பவர்க ளோர்புடை
மேவ நித்தமும்வி ழாவொ டுற்றுவளர்
தேவி சிற்பரைபு ராதனி உமையாளே.

(கு-ரை.) ஆதிமுத்தர் - சிவன். இடமாம் உடற்பகுதி - இடப்பாகம். ஆ டி-அவ்வடி. அவர் - அச்சிவன். மூவகைச்சித்தி - உருவசித்தி, அருவசித்தி, ருபாருபசித்தி. தெற்கிறை - இயமன். யோகின் - யோகத்தினுல்.

ஒற்றைவழி யோடுகின்ற இரட்டையுருள் - பைசைகிள் (Bicycle) அப்பின் ஆவியின் வேகமுற்ற உருள் - நீராவியாலோடுகின்ற வண்டிகள். (Steam locomotives) மின்சார முற்றவுருள்-மின்சார வண்டிகள். (Electric Tramways) ஒலிகால்வ - முன்வாங்கிய ஒலியை ஆதியிற் போல மீள மீளக் காலுகின்ற யந்திரம். அது கிராம்போன் முதலியன. (Gramaphone) நெய்த்திரிகளாதியற்றவொளி - எலெக்டரி விளக்கு முதலியன. (Electric light etc.) இருப்பின் இயல்வார் குழல்-இரும்பாற்செய்த நீண்ட குழாய்கள்(Iron pipes.)

ஆதி முத்தர் மோதினர்: அவர் முற்றறிவாரதலின், தெரிகுவார். பேயர் அறிவாரோ; சித்தர் முனிவோரும் ஓர்தலின் ஊழி பற்பலவும் உற்றிடுவர். ஈதுமெய். பாதம் மனம் வைத்துத்தெறுதல் ஓர்கிலர். ஆடி ஓடி யுற்றும் எவன் மாய்குவர். அவர் எத்தனை செய்தாலும் அத்தனையும் நீரொழுத்தனைய. நின்றூன் நினைத்து வாழ்தலை யருள்வாயென முடிக்க.

இரட்டையுருள் முதலாயின மேவலின் இசை பகலிற் செவிபடாமையின் நிசிவேளை மக்கள் காதினுய்த்து மகிழ்போது மைக்குழலினுரு மகிழ் கூடலென்க. (௫)

## ௸ மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை

தனத்தன தத்த தானன தனத்தன தத்த தானன
தனத்தன தத்த தானன தனதானா.

அகத்திரு ளற்ற ஞானிகள் அடுத்திடு முத்தி தானுமென்
அயற்படு சுட்ட லேதுமில் அதனாலே
அடித்தளிர் சித்த மேவிடின் அனைத்துடல் பற்ற நேரினும்
அதற்கிணை மற்றின் மாணடி அருள்வாயே
பகற்பொழு துற்ற தாரகை யெனப்புவி சுற்று சூரியர்
பதக்குறை யொற்றை யாழியொ டொளிராதே
பசித்தவர் கற்ற நூலென உறத்திகழ் பொற்பி னீள்கழல்
பரித்திடு மற்பி னாலகவி பகர்வேனே
மகத்தழல் பற்று தூமம்விண் மறைத்திருள் பற்ற வூடல்கொள்
மனத்தியர் பெய்த்து வீசிய பணிமேவு
மணித்தர ளத்தி ரோடுதிர் உடுப்பக லொத்து வீதியின்
வழித்தலை முற்று நாடொறும் ஒளிர்கூடல்
நகர்ப்பதி பெற்ற கோமகள் நமக்கிறை வெற்றி வேலனை
நலத்தொடு பெற்று நானிலம் அரசாள
நவிற்றிமுன் விட்ட நாரணி வனத்துறு துர்க்கை மாதரி
நடித்தருள் பர்க்க நாயகி உமையாளே.

(கு - ரை.) பதக்குறை - அருணன். மற்றுஇல் - அதற்கு முத்தியுமிணையில்லை. நால்கவி - ஆசுமுதலாய நாற்கவிகள். பகல் - சூரியன்.

சூரியர் பதக்குறை யொடு ஆழியொடு தாரகையென நூலென ஒளிராதே யுறத்திகழ்கின்ற கழல் பரித்திடுமன்பினால் நாற்கவி பகர்வே னென்க.

தூமமறைத்தலால் விண் இருள்பற்றப் பணிமேவிய மணியுந்தரளமும் உதிர்ந்த உடுவையும் பகலையும் ஒத்து ஒளிர்கின்ற கூடலென்க. (சு)

தனதந்தன தனதந்தன தனதந்தன தனதந்தன
தனதந்தன தனதந்தன தனதந்தன தனதந்தன
தனதந்தன தனதந்தன தனதந்தன தனதந்தன தனதானா.

விழியம்புய மலர்கொண்டொரு
பதபங்கய மிடுவிண்டுமண்
மிசைகண்டில னெனவன்பர்கண்
மொழிகின்றன ரிதுவெண்கொளுன்
மிளிர்பங்கய வடிசங்கர
னிடநின்றது தெரிகின்றிலன் மலர்மேல்வாழ்

விதிமுன்பெழு மிகல்கொண்டிரு
பதமுந்தொட வொருபன்றியின்
வினைமுன்கொடு புவிகிண்டின
னதுகொண்டவ னடிகண்டிலன்
விதியிந்திரன் முதலண்டரு
ளெவர்கண்டவ ருடலொன்றிய அநேகனும்

விழிகொண்டன தியல்கண்டன
னதுகொண்டவன் வலமொன்றிய
விழிகண்டது சொலலுண்டுகொ
லுனையன்றியார் செயலின்றென
மிகவன்பொடு மறையந்தமு
மறைகின்றன பலவிண்டுன குடிகாண

விழைகின்றன னடியன்செயன்
முடவன்கிளை யுறுமொண்கனி
விழைகின்றது நிகரன்றியென்
மொழிகின்றது னருள்கொண்டுபல்
வினையுங்கெட நினதொண்புகழ்
நினைவன்பணி புரிவன்கவி புனைவேனே

வழிகின்றநன் மதுவுண்டிசை
பகர்வண்டுக ளுயர்வண்டரு
வளர்தண்டலை யயனின்றரி
கதிர்கொண்டுசெல் பவர்தங்களை
வழிகண்டிட லரிதென்றவர்
மருளும்படி விழுதண்பணை வயல்சூழும்

வளர்செந்தமிழ்க்குடிகொண்டுறு
செழியன்பதி தனில்வந்துநன்
மலர்மங்கையர் சயமங்கைபோ
டுலகெங்கணு முறவென்றிசை
மருவுந்தனி யரசொன்றிய
மதியின்குலம் வளரங்கயல் விழியாளே
௨

வழிகண்டுனை யடைகின்றவர்
பலர்நின்றொரு புடைகும்பிட
மயலொன்றெனை நிகர்கின்றவர்
பலர்வந்தொரு புடைநின்றிட
மயல்கொன்றரு வுருவொன்றரு
வருவொன்றிய தவர்கண்டிட வரையாதே

வரைகொன்றிடு சசிகொண்கன்மு
னிறுவுந்தளி யிடனின்றுபல்
வரமுந்தரு தருமந்திகழ்
வடிவங்கொளு மலைநந்தனி
மதுரந்தழை தமிழ்தந்தெனை
நினையும்படி யருளம்பிகை உமையாளே.

(கு - ரை.) விண்டு - திருமால். விதி - பிரமன். அவன் - சங்கரன். உருவொன்றரு - ரூபாரூபசித்தி.

சங்கரனது ஒருபதங் கண்டு அப்பதத்திற்குத் தன் விழியையளித்தவிண்டு அதனைக்கண்டிலனென அன்பர் மொழிகின்றனர். இதுவென்சொல்? அடிமுடி தேடியகாலத்து அவ்விண்டு நின்னடி அச்சங்கரனிடப் பாகத்து நின்றதுதெரியாது அவன் இருபதமுந்தொட நினைந்து புவிகிண்டினன், அதனாலே யாவருங் காணற்கரிய நின்னடியே யன்றி முன்கண்ட அவ்வலப்பாதமுங்கண்டிலனென்க.

உனையன்றியொர் செயலின்றென மறையறைகின்றவாதலின் அச்சங்கரனது வலமொன்றிய விழிக்குச் செயலில்லை' அதனால்-அரனும் உன்விழியாகிய தன் இடப்பாகத்துவிழிகொண்டே நின்னியல் கண்டனனென்க.

வண்டுகள் அவர்மருளும்படி அவர்மேல் விழுதண்பனை யென்க. மயலைக்கொன்று உருவசித்தி ரூபாரூபசித்தி அருவசித்தி இவற்றுளொன்று பொருந்திய தவர்களென்க. (எ)

தனதந்த தந்த தனதான
தனதந்த தந்த தனதான
தனதந்த தந்த தனதான தனதானா.

அணுவொன்று கொண்டு புவிகோடி
அளவின்று தந்த தொருபாதம்
அவைபொன்றி முந்தொ ரணுவாக உறுமோர்தாள்

அருவன்று கண்கொ ளுருவோவில்
அதுதொண்டர் கண்டு மறியாத
அருளென்று பண்டை மறைகூறும் அடியேனை

கணுவொன்று பொங்கர் மானேர்வல்
கருமங்கள் வென்று னிருபாத
கமலங்க ளென்று புகுவேனுன் அருளாலே

கதியொன்றி னன்றி யுயலேது
கதிரன்றி யொன்றும் விளையாது
கழலொன்று துங்க வொளிவீச வருவாயே

இணையின்றி யென்று மழியாத
இயல்கொண்ட மைந்த தமிழ்மாதின்
எழினின்ற சங்க முறுகூடல் வளர்மே

இறைவன்சொல் கொண்டு வளர்காழி
எழுமைந்த னுண்டு தமிழ்பாட
இருகொங்கை நின்று வழிபாலை அருண்மாதா

அணையங்க தம்புள் பரியாக
அடைசெங்கண் விண்டு னுருமேவ
அருண்மங்கை யெங்கள் கவுமாரி அமலேசன்

அடல்கொண்டு வென்ற நினதாணை
யதுகொண்டு நின்பி னுறுபூசை
அமுதுண்டி லங்க வரசியும் உமையாளே.

(கு-ரை.) அளவின்று - அளவில்லாமல். அது - அத்திருவடி. கதிர் - சூரியன். மைந்தன் - திருஞானசம்பந்தர். அணை - சயனம். அங்கதம் - பாம்பு. புள் - கருடன். உன்உரு - உனது பெண்வடிவம்.

அன்று, இல்லை, அருளென்பவற்றைப் பாதம் தாள் இவற்றோடு தனித் தனி கூட்டுக.

என்கண் நின்கழல் காணு மியல்பிற் றன்மையின் கணுவாகிய கண்ணிருந் தும் காணுமியல்பில்லாத மரத்தை நேர்வனென்க. கதிரன்றி எப்பொருளும் விளையாமை போல உன்னையன்றி யுய்தலெவ்வாற்றானுமில்லை யாதலின் நீயே அருள்செய்ய வருவாயென்க.

அட்டதிக்கையுந் தன்படையையும் வென்ற நின்னுடைய ஆணைகொண்டு நினக்குப்பின் பூசையமுதுண்டு விளங்கும்படி அமலேசனுக்கு அரசளித்த உமையே யென்க. (௨)

தந்ததான தானதான தந்ததான தந்தன
தந்ததான தானதான தந்ததான தந்தன
தந்ததான தானதான தந்ததான தந்தன தனதானா.

அங்கமாமு றாறுகாலொ டன்புசீல மென்சிறை
கொண்டுமோன கானில்வாழு மந்தண்ஞான வண்டர்கள்
அந்நியாக ரோடுநீடு மன்றிலாடு முன்புகழ் நனியாடி

அங்கமேயி லாதபோத வின்பமாத வந்தனை
உண்டுகாத லோடுமோனை யின்றியேய மர்ந்திட
ஐந்தொடாறெ ழாறுகோண நின்றபாத பங்கய மலர்பாச

பங்கமேவி யேமநாக மஞ்சியாழு மண்டுகம்
என்றுநாயி னேனையோவ வின்றுதேனு முண்குவல்
பங்கின்மேவு நாதரேவ வன்கலாமொர் குஞ்சர வடிவூனர்

பண்புமேயி லாதுமாறன் முன்புவேழ மென்றிரை
தின்றதாலெ ழைவுறாது துங்ககோபு ரந்திகழ்
பங்கமேயி லாதகோயில் வந்துவாயி னின்றடி தொழுவேனே

துங்கநாலொ ருமனைய மைந்தனையு மென்றுரை
கண்டகீர னாதியாய சங்கமேய வன்புறு
தொண்டர்தேற வோதுகூள கண்டர்தேவி யம்புவி தருமாதர

தும்பிசேய வூர்திமேலொ ருங்குமேவ வுன்சிறு
மைந்தனெம னாதுதாளை கந்தனோடு சென்றெதிர்
தும்பைசூடு வாருயாது பொன்றவாள்கொ ளந்தரி சுரர்போல

சங்குமேவ வானவூர்தி யுந்துசீனர் சிங்களர்
அங்கிலேய ராதியோர்வி ரைந்துபோது மங்குபர்
இந்துசூழ மாடகோபு ரங்கண்மோத வங்கலை கடவாதே

எந்திராதி யோடுவானி றங்கிமாட நின்றிவண்
வந்தொரூசி நூறுகாண மென்றுவாணி கஞ்செய
எண்கொளாத வாரமீயு மெங்கள்கூடல் வந்துறை உமையாளே.

(கு-ரை) அங்கம் ஆறு - ஆசன முதற் சமாதி யீறுவுள்ள ஆறு யோகாங்கங்கள். சீலம் - தவவொழுக்கங்கள். வண்டர் - வண்டு. அர் - சாரியை. ஆண்டவனைவு முனைக்க, பழுதுவம் - தேன்.

ஐந்தொடு ஆறு எண்ணாலு கோணம் - ஐந்தும் ஆறும் எண்ணான்குங்கூடி யதாகிய நாற்பத்து முக்கோணம்.

பாச பங்கம் - பாசமாகிய சேறு.
ஏமநாகம் - இயமனாகிய பாம்பு.
வன்கல்லாமோர் குஞ்சரவடிவு - மதுரைக் கோயிலுள்ள கல்யானை.
ஊமன் - உருத்திர சன்மன்.
தும்பி - யானைமுகக் கடவுள்.
காணம் - பொன்.
ஆரம் - முத்து.

ஞானிகளாகிய வண்டுகள் பாடியுண்டு அமர்ந்திட நின்ற நின் பாதபங்கய மலரென்க.

குஞ்சரவடிவு, ஊனுணர் பண்பு மில்லாது வேழத்தை மென்று தின்றதால் நாயேன் மண்டுக மாயினு மூனுணர் பண்புடைமையின் தேனுமுண்குவ லென்று கருதி வந்து நின்று தொழுவேன். அதனால் நின்பாத பங்கயமலர் என்னைமண்டுகமென்று கருதி நீங்குதலில்லை யென வுரைக்க.

களவிலுரைகண்ட கீரனாதியாய தொண்டர் தேற அவ்வுரையை ஊமனாயு மென்றோதிய காளகண்டி யென்க.

சேயவூர்தி மேல் தும்பியு மேவக்கந்தனோடு சென்று வாள் கொண்ட அந்தரி என்க.

சுரர்போல ஆகாயத்தில் வானவூர்தியைச் செலுத்திச் செல்லுகின்ற சீனராதியோர் இஞ்சி சூழுமாட கோபுரங்கள் மோதுதலால் அவற்றைக் கடந்து செல்ல முடியாமல் மாடத்தின் வழியாக வானத்தினின்றிறங்கி ஒருசிநூறு பொன்னென்று அளவுகடந்த ஊதியங்கூறி வாணிகஞ் செய்யச் செல்வப் பெருக்கால் அவர்களிடத்து ஊசி போன்ற சிறு பொருளுக்கும் மதிப்பிலடங் காத விலை பெற்ற முத்துக்களைக் கொடுக்குங் கூடலென்க.

இஃது தென்னாடு முத்துடைத்து என்பவாகலின் அதன் மிகுதியையும் தற்காலம் பிறதேசத்தார் ஆகாய விமானம் தூமசகடம் முதலாய யந்திரங்களாலும் ஊசிமுதலாய கைத்தொழிற்பொருளாலும் நமது தேசத்திருந்து பெரும் பொருள்பெற்றுச் செல்லுதலையும் குறிக்கின்றது. (க)

தனா தனன தனனதனத் தனன தனன தனனதன
தனா தனன தனனதனத் தனன தனன தனனதன
தனா தனன தனனதனத் தனன தனன தனனதன தனதானா.

திருவே வருக வருகமறைத் தெரிவை வருக மறையினொளிர்
சிரமே வருக வருகவறத் திரையி லெழுநவமிர் தமுறு
தெளிவே வருக வெமதுகுலச் சிறுமி வருக வருகெனநின்

ஆனையோடே

## கச மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

திருவார் மலய முறுகொடிநற் செழியன் மொழிய மறையின்முடி
சிவனு ருளமு மடியர்மனத் தெருள்கொண் மலரு மலர்கயிலை
திகழ்கோ யிலுமவ் வடமலையிற் செறியு மிடனு மொருவகையின்
ஒருவாதே

குருகார் கரமொய் சிறியமணற் கொடுசெய் புதிய மனையினறை
குமையா விரைவி னொருவிமினற் கொடியி னனுகி மணியினியல்
குரை நூ புரமொ டனைமடிபொற் குயமு மிறைவ னுரமுதுகும்
முடியோடே

குதியா டியநின் னடிமலரிற் குழலி னினிய தமிழின்மொழி
கொடுசார் பொருளொ டிசைநலமுட் குடிகொள் கவிநன் மலரிடவை
குறுமோர் பெரிய திருவரமெக் குறைசெய் திடினு மருள்கபிற
குறியேனே

குருவே வருக பிரணவமுற் குதலை மொழியி னுறவுரைசெய்
குகனே வருக வருகபகைக் குடரினிலகு மயிலுண்டைய
குமரா வருக வருகவெனக் கொடுவின் மலைகொள் கரனுரைசெய்
மயிலூர்வேள்

குயிலே வருக வெனதுயிரிற் குலவி யொளிகொள் கொடிவருக
குணமே வருக வருகவெனக் குழுமு குறமின் மகளுமெழு
குயிலூர் திருவன் மகளுமுறக் குறுகி நினது கழல்பணிய
அவர்மூவர்

உருவோ ருருவி னுறமடிவைத் தூரமு முதுகும் வருடியென
துறைநீர் வருக வெனமகிழ்வெற் புதவு மமல முதல்வியெம
துயிரே யுயிரி னுயிருமுணர்விற் கொளிசெ யுணர்வின் வடிவமுறும்
ஒருதாயே

உறவே விறகு சுமைகொடுபுக் குலகின் மறுகி விலைபகரும்
ஒருபா ணடிமை யரசொடுமேற் றுயர்வு மடைய முடியுதவும்
ஒருகோ மகள்விண் மதிகுலமுற் றொளிரு மதுரை நகரரசி
உமையாளே.

(கு-ரை) திரை - கடல். ஆகுபெயர். அன்னை - காஞ்சனமாலை. மலயமுறு கொடிச் செழியன் - மலயத்துவச பாண்டியன். வடமலை - மேருமலை. தருகு - வளையல் சிறியமனை - சிற்றில். குமையா - குமைத்து, அழித்து. இறைவன் - மலயத்துவசன். குயிலூர்திருவன் - இந்திரன. இந்திரன்மகள் - தெய்வயானை. வெற்பு - மலையரசன். பாண் - பாணபத்திரன்.

செழியன் நின்னன்னையோடு வருகவெனமொழிய மறைமுடி முதலாயவற்றை ஒருவகையினொருவாமல், சிற்றிலின் அறையையழித்து அதனையொருவி மின்னற்கொடிபோல அணுகி மணிநூபுரமொடு அன்னைமடிமுதலாயவற்றிற்குதியாடியநின் அடிமலரென்க.

மலைகொள் கரன் வருகவென உரைசெய் வேள் வருகென இருமகளிருமுற அம்மூவருங் குறுகிப்பணிய அவர்களை வருகென அழைத்து மடிவைத்து வருடி மகிழுமுதல்வியே யென்க. (௧0)

தனத்தன தந்த தனத்த தந்தந் தனதந்தந்
தனத்தன தந்த தனத்த தந்தந் தனதந்தந்
தனத்தன தந்த தனத்த தந்தந் தனதந்தந் தனதான.

எருக்கலர் தும்பை கடுக்கை கஞ்சம் பிசுமந்தம்
இறைத்துவி ழுந்து துதித்து நின்றங் கிருசெங்கை
யிணைத்துநி மிர்ந்து குவித்து நெஞ்சங் கசிவொன்றும்
அடியார்வான்

இபத்தினை யெண்கண் முகத்தை வெண்சங் குடனேந்தும்
இசைத்திடு செங்கை யிணைத்த குஞ்செம் பொனையென்றும்
எடுத்தளி கஞ்ச வுருக்கொ ளுஞ்சு ந்தரமொன்றும்
நினையாதே

திருக்கிளர் சங்கம் வெறுக்கை வண்செந் தமிழின்பு
திளைத்திடு துங்க முதற்ப லங்கங் களையொன்று
சிறப்பொடு தங்க வளித்து நெஞ்சந் தனிலன்பில் கொடியாரை

தினக்கதிர் முன்பு புழுச்செல் பண்பொன் றிடநன்று
திளைத்துணை யின்றி விழச்செய் தெங்கும் புகழ்கொண்டு
செருக்குறு மென்ற னகத்து மொன்றுன் பதகஞ்சம்
மறவேனே

அருக்கனொ டிந்து வுடுக்க ணஞ்சென் றகனண்ட
அடுக்குமி கந்து தடக்கு மொண்செங் கயல்கொண்ட
அடற்கொடி யொன்று துகிற்கண் முன்றங் குறவொன்றும்
அறியாதே

அடிக்கடி பொங்கர் மிசைத்த வழ்ந்திங் குறுமென்றில்
அடுத்தொளிர் செம்பொ னிழற்செய் வெண்பொன் கொடுதுன்றும்
அணிச்சிக ரயபல் சுதைக்கு டங்கண் டவர்சிந்தை யருள்கூடல்

இருக்கொடு தொண்டர் தொடுத்த சந்தந் திகழ்பண்டை
இபற்றமி ழண்டர் நவிற்றி யென்றும் பணிகின்ற
எழிற்றளி நின்று கயற்க ணன்பின் கடல்பொங்க வளர்மாதா
எனைப்பணி கொண்டு நினைக்கு முன்சிந் தனையின்கண்
இருட்பட லங்கள் கெடப்பு குந்தென் கவிகொண்ட
இசைக்கருள் விந்தை தமிழ்க்கு முன்றொண் டுறுநங்கை
உமையாளே.

(கு - ரை) பிசுமந்தம் - வேம்பு. வான் இபம் - வெள்ளையானை. எண்கண் முகம் - எட்டுக்கண்ணையுடைய நான்கு முகங்கள். சங்குடன் ஐந்து - சங்குடன் சேர்த்தெண்ணியபஞ்சாயுதங்கள். கஞ்சவுருக்கொள்நிதி - பதுமநிதி. சங்கம் - சங்கநிதி. வெறுக்கை - பொன். தளி - கோயில். தமிழ்க்கு - தமிழ்க்கவி கேட்டு. தொண்டுறுநங்கை - மகளாகத்தொண்டு செய்த நங்கை. வான் இபம் - இந்திர பதத்தைக் குறிக்கின்றது. எண்கண்முகம் - வேதமுரைக்கின்ற நான்கு முகமுடைய பிரமபதத்தைக்குறிக்கின்றது. செங்கை - துட்டநிக்கிரகஞ் செய்யுங்கையினையுடைய திருமால் பதத்தைக்குறிக்கின்றது.

அடியார் வானிபத்தையும் முகத்தையும் கையையும் என்றும் பொன்னை யளிக்கின்ற கஞ்சவுருக்கொண்டநிதியையும் சங்கநிதியையும் வெறுக்கையையும் தமிழ் திளைத்திடு துங்க முதலாகிய அங்கங்களையும் பொருந்துகின்ற சிறப்பியல் போடு தங்கும்படி அவர்களை யளித்துக்கொடியார் ஒன்றிடவிழச்செய்து புகழ் கொண்டு என்ன கத்து மொன்றிய நின்பதமென்க. இதனால் அடியார் இந்திரபதம் பிரமபதம் திருமால் பதம் குபேரபத முதலாய சிறப்புப் பெற்று வாழ்தலும் கொடியார் அழிதலுங் கூறியது காண்க.

இல்லை யீத்தொளிர்கின்ற செம்பொன் கொடுதுன்றுஞ் சிகரத்தையும் சுதைக்குடத்தையுங் கண்டவர் அருக்கனும் இந்துவும் உடுக்கணங்களும் கயல் கொண்ட கொடித்துகில் கண்முன் தொங்குதலால் ஆகாய வழியொன்று மறியாமல் தவழ்ந்து இங்குறுமென்று மருளுகின்ற கூடலென்க. இதனால் அருக்கன் பொற்சிகரத்துக்கும் இந்து வெண் பொற்சிகரத்துக்கும் உடுக்கணஞ் சுதைக்குடத்துக்கும் உவமமாதல் காண்க. (கக)

தானன தந்தா தனதன தனனா தனனா தந்ததன
தானன தந்தா தனதன தனனா தனனா தந்ததன
தானன தந்தா தனதன தனனா தனனா தந்ததன தனதானா.

தோகைகள் பைங்கா னடமிடு தொழின்மே விடவா னின்றுகினி
சூழ்தமிழ் முன்பா டிடவெழு சுரமே யறுகால் வண்டரிசை
சோழனை வென்றா னகர்வளர் துகடீ ரருளா னந்தனுழு
தொழின்மேலோர்

தோள்வலி கொண்டா ரிரவலர் துயர்தீர் கொடையா ரன்பொடி
சூழ்நெறி நின்றா ரெமர்குல சுகவா ரிதிநீர் பொங்குமதி [சை
தோய்குரு முன்போர் குறுகிய சுவரே பரியா வுந்தியொரு
துறைகாண

ஓகையின் வந்தோ னகர்பல வுறைவார் விழைவா லந்துருவி
னோடொளி ரைந்து ரிடனம ருரவோ னணிமா முன்பகரும்
யோகுறு மெண்பே றுறுதவ னொருவா தறிவால் வந்தனை செய்
நினதாள்கள்

ஊழ்வலி வென்றோ ருணர்குவ ருணரே னுரைதா னென்புகல்வன்
ஊனுடல் கொண்டோ பணிகுவ துருவோ வருவோ நின்கழல்கள்
ஊகமொ டெண்சேர் கலைகொடு முணர்சால் பிலவே யென்புரிவ
தருள்வாயே

ஈகையி னின்று ரிரவல ரிவண்மே வுகநா மென்பொருளும்
ஈகுவ மென்றே பலர்நட விரவால் வருவா ரின்றிமனை
யேழ்நிலை சென்றே மெலிகொடி யிமையோர் பதியோ டொன்றி
யவண் உறுவோரும்

ஏழ்பவம் வென்றார் முனிவரு மிரவா மையினன் முன்பனிகொள்
ஈசனை யின்றே யுடல்பொரு ளெழிலா ருயிரே யென்பலரும்
ஈகுவ மென்றே யவனுல கிறுவாய் தடவா நின்றகவும் உயர்கூடல்

வாகைகொண் மொய்ம்பா ருறைதிரு மதுரா புரியா ளம்பிகையென்
வாய்வரு மன்பார் கவியுநின் வளமார் பதமே கொண்டபரை
மாதரி யெண்டோண் மதுபதி மயிடா சுரனுள் பொன்றமிதி மகமாயி

வாளொடு நின்றாய் பகவதி வனயோ கினியே சுந்தரிமின்
மாலினி வன்பார் முழுதுமுண் வசுசே யிளையா யந்தரிவிண்
மாலுறு பண்பார் கயல்விழி மலயா சலமா தங்கிசிவை உமையாளே.

(கு - ரை) தோகை - மயில். கான் - சோலை. எண்பேறு - அட்டசித்திகள். வாரிதி - கடல். மதி - சந்திரன், அறிவு.

·தோகை மேவிடக்கிளபாடிடவண்டு எழுசுரமிசைக்கின்ற நகரென்க.

மேலோரும் கொண்டாரும் கொடையாரும் நின்றாருமாகிய எமர் குல வாரிதி என்க.

எமர் குலவாரிதி நீர் பொங்குகின்ற மதியாகிய எம்மைத்தோய்கின்ற குரு வெனவும் பொங்குகின்ற மதிதோயந்த குருவெனவுமுரைக்க.

மதியுங் குருவும் வந்தோனும் உரவோனும் தவனுமாகிய நகர்வளர் அருளானந்தன் அறிவால் வந்தனை செய் நின்றுமெனக்க.

சுவரேபரியா உந்திவந்தேன் என்றது, ஒருதுருக்கவரசன் முன்பு இடிசுவரே குதிரையாகுமாறுசெய்து அதன்மேலூர்ந்து சோழவந்தானூரை வலம் வந்த செய்தி குறிக்கின்றது. சோழனைவென்ற னூரென்பது இக்காலத்துச் சோழவந்தானென மரீஇயது.

ஐந்துருவினோடு ஐந்தூர் அமர்வோனென்றது வைகாசித் திங்கள் பூர நாளில் யாம் சமாதி புகுவோ மென்றபோது சோழவந்தானூர், கிண்ணிமங்கலம், சின்னமனூர், பெரியகுளம், மதுரை யென இவ்வைந்தூரிலுமிருந்து அங்கு வந்திருந்த அடியர்கள் தந்தம் ஊரில் சமாதிபுகவேண்டுமென்று வேண்ட அவ்வாறே ஐந்துவடிவங்கொண்டு அந்நாளில் அவ்வைந்தூரினும் இற்றைக்கு நூற்றைம்பது வருடத்தின்முன் சமாதிபுகுந்த செய்தி குறிக்கின்றது.

சமாதி புகுந்த காலத்து அவ்வைந்தூர்ச் சமாதிக்கும் துருக்கவரசப்பிரதானிகளால் மானியங்கள் விடப்பட்டன. அம்மானியங்கள் மதுரை யொழிந்த மற்றைய ஊர்களில் இன்னும் அழியாது நடைபெறுகின்றன. மதுரைமானியம் அங்குள்ள மடத்தோடு சிறிது காலத்தின்முன் ஒருவனுலபகரிக்கப்பட்டிருந்தது. ஈசையினின்றூர் நாம் ஈகுவம் இரவலர் மேவுக என்று கொடி நட ஒருவரும் இரவாமையினுல் எழ் நிலைமாடத்தின் மேற்சென்று மெலிகின்ற அக்கொடிகள் இமையோர்பதி சென்று அங்குள்ளாரு மிரவாமையினுல் சிவலோகம் வரைசென்று முன்பலிகொண்ட ஈசனை உடல்பொருள் ஆவி மூன்றும் தருவோமென்று அழைக்கின்ற கூடலெனக்க.

மகமாயி - மருஉ வழக்கு (௧)

தன்ன தந்தன தன்ன தந்தன தந்தன
தன்ன தந்தன தன்ன தந்தன தந்தன
தன்ன தந்தன தன்ன தந்தன தந்தன தனதான.

எளிய நின்றனை யடிமை கொண்டது முண்டுகொல்
இன்றவி யொண்கழுன் மலர்பெறுந்தவ மின்றினின்
இதய பங்கய முறலு முண்டுகொ லென்றருள் உருவானோர்
இதுபு கன்றடி யியல்பு கண்டுரை யென்றிடின்
எனதெ னுஞ்செயல் புவன மெங்கணு மென்றுமில்
எதுவு நின்செயல் பணிசெய் தொண்டுகொ ளென்றுமுன் பல்காலேன

அளிகொ ளின்றமு னியல்பு கண்டில னன்பிலன்
  அமலர் தங்குழு முனமெ வண்புகல் வண்புயல்
  அறமில் வண்டர்கள் செறுவி னும்பெய னுண்டின தருள்வேலை

அணைய வொண்கழ லெனது ளம்புகி னுந்தரும்
  அறித லின்றியு மரசன் மன்பதை யின்றுய
  ரதுக ளைந்திடு மெனையு மின்புற வந்தருள் புரிவாயே

வளியொ டங்கிம ணுதகம் விண்சுடர் திங்களும்
  மலமு றும்பல வுயிரு மெண்படி வங்கொளும்
  மதியின் வந்திடு குலம்வி ளங்கிய சங்கரி மலைமேலை

வளரு நஞ்சிவ குமரன் முன்கட வுண்டவன்
  வழிப டுங்குரு பரனை யைங்கர மைந்தனை
  மனிதர் விண்படர் சுரரொ டின்புற முன்றரு மொருதேவி

களிசெய் தெங்கின மதுவை யுண்டபல் விண்படர்
  கழையை மென்றொளி நரிகள் கண்டும ருண்டடர்
  கமுகி டம்புக விழுகு ரங்குதெ ருண்டிட மலர்வாவி

கரைவி ளங்கன முதகம் வெண்சிறை மொண்டுபெய்
  கழனி வண்பொழின் மதுரை யம்பதி தங்கிய
  கடவுள் பங்குறு மமுத வஞ்சிச வுந்தரி உமையாளே.

(கு-ரை) எளிய - விளி. அருளுருவானோர் - ஞானிகளுந் தேவரும். அமலரென்றது - மேற்சொல்லிய அருளுருவானோரை. புயல் பெயல் உவமம். கழலுளம் புகல் பொருள்.

அரசன் துயர்களைதல் உவமம். நீயருள்புரிதல் பொருள்.

நரிகள் கண்டு மருண்டு கமுகிடம் புகும்படி மதுவுண்டு விழுகுரங்குகள் தெருண்டிட. அன்னங்களுதகத்தைச் சிறைமொண்டுபெய்கழனி யென்க. (கங)

தனனதந்தந் தனனதந்தந் தனனதந்தந்
தனனதந்தந் தானந்தந்
தனனதந்தந் தனனதந்தந் தனனதந்தந்
தனனதந்தந் தானந்தந்
தனனதந்தந் தனனதந்தந் தனனதந்தந்
தனனதந்தந் தானந்தந் தனதானா.

சடல்கடந்துந் தறைநடந்துங் குறைநவின்றுங்
கலைபயின்றுங் காணின்றங்
கனைதுறந்தும் புவிபுரந்துங் கதியறைந்தும்
பிறபுரிந்துங் காய்துன்பங்
கதுவிமூந்தும் பசியினைந்துண் பதுபுரிந்தங்
குடனுறங்குங் காயங்கொண் டுறுமாசை

கழல்வதென்றும் பருமயங்கும் பருவமொன்றும்
படிவநஞ்சங் காலுண்கண்
கரவுறும்பெண் களைவிரும்புங் கசடொழிந்தந்
தகனெனுந்திண் காலன்றன்
கயிறரிந்தொண் டவமுயன்றுன் கழனினைந்தின்
புறுவதென்றுன் கானங்கொண் டுறுசோதி

படர்சிலம்பின் பதநடங்கண் டடைவதென்றுன்
பணிபுரிந்தென் பாசம்பண்
படுவதென்றுன் பெரியதொண்டின் கடையனென்றுன்
புகழ்விழைந்துன் பாணின்றுண்
பதுமொழிந்தென் கருமபந்தங் கெடவனந்தங்
கவிபுகன்றுன் பாதங்கொண் டமர்நாளை

பலகொடுந்தன் பதுபுரிந்துங் குழவிவெம்பும்
படிவிடும்பெண் பாவின்றென்
பலபகர்ந்தென் செயலதின்றுன் றனையொழிந்திங்
குயலுமின்றென் பாலன்பின்
படர்வதின்றன் செயலிறந்தும் பரிவுறுந்திண்
பதமுமென்றுன் பாமன்பொன் றருள்வாயே

படியின்பஞ் சுடையுமின்றம் பரம்வளர்ந்தும்
பலியிரந்தும் பேய்நஞ்சம்
புசிதபின்றும் தபுதலின்றிந் தனம்வில்வன்றொண்
டதுபுரிந்தும் பூதந்தன்
புடைநெருங்குஞ் சுடலைசென்றெங் கணுமுழன்றும்
பொடியொடங்கம் பூணும்பண் பொடுதூய

புலமருண்டந் தணர்தொழும்பென் றிழிவறைந்தங்
கவர்வெருண்டென் போமென்றம்
புவியினின்றங் கிகழவும்பின் பவர்விரும்புங்
கணிகைமுன்பும் போய்வந்தம்
புயவில்கொண்டன் றொருவனுந்தும் படியெதிர்ந்துந்
தினவிழந்துண் போரெங்கென்,   றொருவேடர்

தடிகண்டென்றுண் டுமிழ்தல்கண்டுண் டடியுமுண்டங்
கமைதலின்றஞ் சாதன்பன்
தனையனங்கந் தனையுமுண்டும் பசியுழந்தங்
குதிர்வுதின்றந் தார்மைந்தன்
தமிழ்நிலங்கொண் டவனுடைந்தங் கெழுசலங்கண்
டடைமுனென்றுந் தாநின்றங்   கடிசூரல்

சருவநின்றந் தொழிலினுந்தன் பயனதின்றும்
திரிபுரம்பன் றன்வந்துன்
சனகனெண்பொன் கிரியும்வெண்பொன் கிரியுமுன்கொண்
டினிதுறைந்தொண் டார்மண்பொன்
சகலமுங்கொண் டேறமுனஞ்செந் தமிழ்நிலந்தந்
தெழில்பொருந்துந் தாயன்பொன்   றுமையாளே.

(கு - ரை.) அம்பரம் - ஆகாயம். வளைதல் - ஆடையாகச்சுற்றுதல். பஞ்சு உடையும் இன்று - பஞ்சு ஆடையும் இன்றி. நஞ்சம் புதிது - கடலிற் றோன்றிய புதிதாகிய ஆலகால விஷம். தபுதல் - இறத்தல். இந்தனம் வில் வன் றொண்டு - பாணபத்திரனுக்காக விறகைவிற்ற வலியதொண்டு. பொடி - சுடலைச சாம்பல். அங்கம் - எலும்பு. அந்தணர் - சுந்தரமூர்த்தி நாயனார். கணிகை - பரவையார். ஒருவன் - அர்ச்சுனன். வேடர் - கண்ணப்பநாயனார். தடி - பன்றியூன். அடியுமுண்டு - கண்ணப்பநாயனாரது செருப்புக்காலாலுதையும்பட்டு.

அமைதலின்று - அமைதல் இன்றி, அமையாமல். அன்பன் - சிறுத்தொண்டநாயனார். உதிர்வு - உதிர்ந்த பிட்டு. தார்மைந்தனாகிய நிலங்கொண்டவன் - பாண்டியன். சூரல் - பிரம்பு. ஐந்தொழில் - பஞ்சகிர்த்தியம். பயனதின்றும் - பயனின்றியும். சனகன் - தந்தை, மலையரசன்.

கான்நின்று அங்கனைதுறந்தும் - வனத்தில் நிலைபெற்று மனையாளைத் துறந்தும். கடம் கடத்தல் முதலாயின செய்து கதுவிலைந்து உண்பதுபுரிந்து

## உஉ. மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

உறங்குங் காயம் கொண்டுறும் ஆசை கழல்வது என்று, ஒழிந்து அரிந்து முய ன்று நினைந்து இன்புறுவது என்று; கண்டு அடைவது என்று; புரிந்து பண் படுவதென்று; கடையன் விழைந்து நின்று ஒழிந்து புகன்றுகொண்டு அமர் நாளென்று; என்க.

வெம்பும்படிவிழும் பெண்பால் இன்றுபலபகர்ந்து என்; என்செய்வது இன்று உன்னையொழிந்து உயல்வதும் இன்று. என்பாற் படர்வது உன்செ யல் இறந்து உம்பரின் உறும்பதமும் என் துன்பாம் ஆதலின் அன்பு ஒன்றே யருள்வாயென்க.

பஞ்சுடையுமின்றி வளைந்தும் இரந்தும் அயின்றும் தபுதலின்றித் தொண்டு புரிந்தும் பூதநெருங்கிய சுடலைசென்று உழன்றும் உணவுகிடையாது அங்குள்ள பொடியும் அங்கமும் பூண்டு சுடலைப்புகையாற் புலமருண்டு அந்தண ரைத்தொழும்பென்று இழி வறைந்து அவரிகழவும் பின்னும் அவர் கணிகை முன்புந் தூதுபோய் வந்து வில்கொண்டு அடிக்கும்படி அர்ச்சுனனோடு வலிய எதிர்த்தும் அப்பன்றியூன் கிடையாமல் தின்னுதலிழந்து உண்போர் யாவரெ ன்று தேடி வேடர் உண்டு உமிழ்தல் கண்டு அதனையுண்டு அடியுண்டு அமை யாது அங்கந்தனையு முண்டும் பின்னும் பசியுழந்து உதிர்வுதின்று பாண்டியன் உடைந்தோடுகின்ற சலத்தை யடையென்று அடித்த பிரம்பு படும்படி நின்றும் ஐந்தொழில் செய்துந் தனக்கொரு பயனுமின்றியுந் திரியு நம்பன் உன்னை யடைந்து உன்றந்தையின் பொன்மலை வெள்ளிமலை கொண்டுறைந்து தார்மண் பொன் சகலமுங்கொண்டுறத்தமிழ் நிலந்தந்திடுந் தாயேயென முடிக்க.

தந்தனத் தத்த தாத்த தந்தனத் தத்த தாத்த
தந்தனத் தத்த தாத்த தந்தனத் தத்த தாத்த
தந்தனத் தத்த தாத்த தந்தனத் தத்த தாத்த தனதானா.

செந்தமிழ்ச் சித்தர் மார்க்க மொன்றிமுற் பற்று நீத்த
சிந்தனைத் திட்ப நோக்கின் வங்கமொத் தொட்பம் வாய்த்த
திண்கழற் பொற்பு நோக்கி முன்புறப் புக்கு மீட்பில் பவமாய

சிந்தினுட் சுற்ற னீத்து நின்றவொப் பற்ற வீட்டின்
இன்பினைப் பற்ற வேட்கை கொண்டுமுட் புக்கு வாட்டு
செந்தழற் கொத்த நோக்கின் மங்கையர்ப் பற்று காட்சி தொலையாதே

சந்தவெற் புய்த்த தேர்க்க ணின்றலர்க் கற்றை தூற்றும்
அங்கசற் கிற்று மூர்க்க மொன்றிமுற் கற்ற நூற்கள்
சண்டன்வெப் பிற்கு மேற்சென் மஞ்செனப் பட்டு நீப்ப அலைபோலே

சஞ்சலப் பட்டு வேட்டை சென்றிளைப் புற்று வேர்த்தும்
என்பினைப் பற்றி வாய்க்கொள் புன்செயற் குக்கல் போற்பொய்
தங்கெழிற் கச்சு மேற்கொள் கொங்கையிற் புத்தி போக்கி உழல்வேனோ

அந்தரத் துற்ற நாட்டி னைந்தருக் கற்கும் வேட்கை
கொண்டிடப் பொற்கை நீட்டி வந்தவர்க் கத்த நீர்ப்பெய்
தன்புறப் பெட்பி னீத்து வண்டமிழ்ச் சொற்கள் பாட்டின் வளமேவும்

அம்புயக் கொற்ற மேற்கொண் மைந்தர்நற் கற்பின் வாய்த்த
மங்கையர்ப் பற்றி நாட்டு முந்தறத் துற்று நீத்த
அந்தணர்க் கொத்த வூட்டி நைந்தவர்க் கச்ச நீக்கும் உயர்கூடல்

கந்தரத் துற்று மேற்செல் பைந்தருப் பற்றி நாட்டம்
ஒன்றிமைப் பற்ற சித்தர் நின்றிவட் புக்கு வாழ்த்து
கம்பலைச் சொற்பெய் கோட்டம் வந்தசிற் சத்தி பேய்ச்சி கவுமாரி

கங்கைமுற் பெற்ற வேற்கை மைந்தனைப் பத்தர் போற்று
துங்கனைப் பெற்ற மோட்டு மெண்கரத் தப்ப னைத்து
கந்தனைப் பெற்ற சீர்த்தி யங்கயற் கட்பி ராட்டி உமையாளே.

(கு-ரை.) சித்தர் மார்க்கம் - யோகமார்க்கம். முற்பற்று - புறப்பற்று. சிந்தனைநோக்கின் - சிந்தனையாகிய கண்ணினால். சிந்து - கடல். நோக்கின் - நோக்கினையுடைய. சந்த வெற்பு - மலயமலை. சந்த வெற்புய்த்த தேர் - தென்றலாகிய தேர். அலர்க்கற்றை - புஷ்பபாணங்கள். சண்டன் - சூரியன். மஞ்சு - மேகம். முந்து அறம் - இல்லறம். கந்தரம் - மேகம். கோட்டம் - கோயில்.

ஒன்றி நோக்கினால் நோக்கிப் புக்கு நீத்துப் பற்ற வேட்கை கொண்டும் காட்சி தொலையாது,

அங்கசற்கு இற்று மூர்க்க மொன்றி நூற்கள் மஞ்சென நீப்ப அலைபோற் சஞ்சலப் பட்டுக் குக்கல் போற் புத்திபோக்கி யுழல்வேனோ என்க.

கற்பக முதலாகிய ஐந்தருக்களும் ஈகையைக் கற்கும் வேட்கை கொள்ள ஈத்துப்பாட்டின் வளமேவு மைந்த ரென்க.

மைந்தர் பற்றி உற்று ஊட்டி நீக்குங் கூடலென்க.

காட்ட மொன்றிய இமைத்தலற்ற தீர்த்தர்தருப் பற்றி நின்று இவட்புக்கு வாழ்த்து கோட்ட மென்க. (கஓ)

## உச மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

தனதனந் தந்த தத்தந் தனதனந் தந்த தத்தந்
தனதனந் தந்த தத்தந் தனதானா.

கருதிலங் கண்ட மட்டுங் கருநிறந் தங்கு பற்பங்
கமழுமின் கொண்டொர் பக்கம் புகைதானே
கனலொடுந் துன்ற லொத்துங் கருணையென் சிந்து முற்றுங்
கசியுமொண் கொண்ட லொத்துந் திருமாலே
பொருவறம் பொங்கு பொற்கொம் பெருதெனுந் துங்க வெற்பின்
புறமிருந் தங்க ணிற்குஞ் சிறுசேய்சீ
புகவெழுங் கொங்கை யிற்றங் குறுபயந் தந்த நிற்கும்
புகல்வதென் றஞ்ச மெற்றுன் கழலானே
தருவுறுஞ் சந்த வெற்பன் சுடுசுரங் குன்ற முற்புன்
சமண்மதம் பொன்ற நற்பண் புகல்வார்சீர்
தனிமடஞ் சங்க மற்றுந் தருமிடங் கொண்டல் சுற்றுந்
தழைவுறுந் திங்க ளொத்தம் பொழின்மேவு
தெருவளந் தங்கு நித்தம் புகழ்புனைந் தன்பின் முற்றுந்
திருவர்செந் தண்டமிழ்க் கொண் டறைகூடல்
திகழுநங் கந்த னுக்கன் புடனிலந் தந்த முக்கண்
தெரிவையம் பொன் றளித்தங் குமரமபானே.

(கு - ரை.) அம் கண்டமட்டும் - அழகிய கழுத்துமட்டும். பற்பம் - விபூதி. மின் - மின்போன்ற வடிவுடையசிவன். சிந்து - கடல். சிறுசேய் - திருஞானசம்பந்தர். பயம் - பால். சந்தவெற்பன் - கூன்பாண்டியன்.

மடமும் சங்கமும் மற்றுந் தருமிடங்களும் கொண்டல் சுற்றுந் திங்களொத்துப்பொழின் மேவிய தெருவென்க.

தெருவளந் தங்குகூடல் திருவர் நித்தம்புகழ் புனைந்து அறைகூடலென்க.

மின்னையொருபக்கங் கொண்டு கருணைக்கடலே மழையாகக் கசிகின்ற கொண்டலொத்தும்புகை கனலொடுந் துன்றலொத்தும் திருமாலொத்த எருதெனும் வெற்பின் புறமிருந்து சேய்சீர் புகுமாறுதானே பயந்தந்த நினக்கும் புகல்வது என்னென்க.

திருஞானசம்பந்தர் முன்பு இடபவாகனத்தில் ஈசனோடுதோன்றிய காட்சி மலைமேல் மின்னொடுதோன்றிய மேகமும் கனலோடுதோன்றிய புகையுமொக்குமென்பது கருத்து. (கக)

தனதன தனதனந் தானனந் தானன
தனதன தனதனந் தானனந் தானன
தனதன தனதனந் தானனந் தானன தனதான

வடமொழி மறையினந் தேடியுங் காணரு
மலரடி கழகநின் றேநிலந் தோய்வுற
மனமுபர் தமிழ்வளந் தேறவந் தேமலர் முகம்வாடி

வளரொரு பலகையின் பாலிருந் தேநிமிர்
மதிநிறை புலவர்முன் றாரநின் றேயுடல்
வளைவுற வுரைதளர்ந் தாசிலென் பாவினும் நவைகூற

இடமுளர் யவர்களொன் றாகமொன் றேசொலி
இயல்புகல் கிலெனெழுந் தீநிறைந் தார்விழி
தெரிவுற வழல்சிவன் பாலுமஞ் சாதெதிர் புகல்கீர

தெளிவொடு நடவுகொண் டாய்நலந் தோய்மதி
திகழ்புகை பெனுமரும் பேயுநின் றாளிணை
சிரமுற வணிகுவன் பாடிநின் றேதமிழ் புனைசேவடியே

கடலெழு மொலியினங் காடியின் பாலொளிர்
மணியொடு தரளமுந் தூமயின் சார்பல
கதிர்விடு மொளிசெயுந் நீபமுஞ் சேணுறு கதிரோடே

கஞலுறு மதியெனுந் தேசுகொண் டார்கடை
டணியிழை கொளநினைந் தோகைகொண் டேவிலை
கருதிடுபொழுதவண்பாவைகண்டேமருள் இளையோர்கள்

மடமொடு வணிகர்முன் பேழ்மடங் கோதிய
தகவறு விலைதருந் தீர்வருஞ் சீர்திகழ்
மதுரையி னிறைவிகங் காளியம் பாலிகை மகதேவி

மதுபதி குமரியெண் டோளிவெண் போதுறு
கலைமக டிருவொடுஞ் சூழநின் றேவல்செய்
மலைமகள் விசயைநம் பூழியன் கோமகள் உமையாளே

(கு - ரை) ஆசு - குற்றம். நவை-குற்றம். யவர்-யாவர். சுதை-அமிர்தம். ஒலியின் - ஒலியினையுடைய. அங்காடி - கடைவீதி. தூமஞ்சார் தீபம் - புகையாலெரியுந் தீபம். (காஸ்லயிட்) மின்சார் தீபம் - மின்சாரத்தாலெரியுந் தீபம். (எலெக்டிரிக் லயிட்.)

பலகையின் பாலிருந்து நிமிர்புலவர் முன்அடி நிலந்தோய்வு மனந்தமிழ் வளந்தேறவந்து முகம்வாடித் தூரநின்று உடல்வளைவுற உரைதளர்ந்து, திடமுளார் யாவரென்று, ஊகஞ்சொல்லி, இயல்புகல்கிலனாகித் தீவிழிதெரிவுற அழலுஞ்சிவன் பாலுமெனவியையும். கீரா து நலந்தோய்ந்த மதியாகிய சந்திரனிடத்து விளங்குகின்ற அமிர்தமாகிய அரும்பொத்த நின்றுளென்க.

மணி கதிரும் தாளம் உடுவும் தீபம் மதியுமொக்குமென நிரனிறையாற் கொள்க.

கடையில்இழை கொளநினைந்து விலை சுருதிடும்போது அங்குள்ள பாவையைப் பெண்சுளென்று மயங்கிய இளையர் அம்மயக்கத்தால் அறியாமையுடையராகி வணிகர்சொல்லிய அதிக விலைகொடுத்து அணிகொள்ளு மதுரை யென்க.

தக்கத் தத்தத் தத்தத் தத்தத்
தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தனதன தனதன தனதன தனதன தனதானா.

வெற்புக் கொத்துப் பட்டுக் கச்சுக்
கிழிபட வெழுமிள வனிதையர் குவிமுலை
வெப்பத் துட்பட் டுத்துப் பற்றுத்
தழலுற்று மெழுகென மனமிக வுருகிட
வித்தைத் திட்பத் தெப்பத் தைக்கைத்
த்துகளர் நிலமுறு விதையென வழிதர ஒளிர்தீபம்

விட்டிற் பட்டுப் பட்டுக் கெட்டுச்
சிறைகரு கிடவிழு செயலென வளர்பிணி
வெட்டைக் குட்பட் டிற்றுப் பொற்பற்
றுடறளர் பொழுதினு மயல்கொடு சிறுமியர்
மித்தைக் கட்சிக் கித்தட் டுக்கெட்
டறிவழி தரவெழு பவநிறை கடல்புகும் அடியேனும்

அற்பிற் பெட்டுச் சித்தத் துக்கத்
தினையொரு வடியவர் கருதுன திருகழல்
அர்ச்சித் துப்பொற் புற்றுப் பற்றுக்
களையவு முனதிசை விழையவு மனுதினம்
அத்தத் திற்கிச் சித்துக் கொட்புற்
றலைவது தொலையவு முயர்கவி பகரவும் அருள்வாயே

அட்டிற் புக்குக் கட்டுப் பட்டுப்
புடைபெறு ஞமலியி னுளமருள் கொடுபெறும்
அத்தற் செற்றுப் பெற்றுப் பற்றிப்
பரிவொடு புரவுசெ யனையொடு தழுவிய
அற்பப் புத்தித் துட்டற் கற்றைப்
பொழுதருள் பரசிவ னிடனமர் நினதருள் பணிவேனே

கற்புக் கற்புக் கொட்பப் பட்புக்
குயிலென நிலவிய குணநிதி திரிபுரை
கர்த்தர்க் கொத்துப் பொற்கைப் பற்றித்
தனுவென மலைவளை மலைமகள் சயமகள்
கற்றுத் தர்க்கத் துற்றுச் சுற்றிக்
கதறினு மறிவரு முதல்வியெ னகமொளிர் அறிவாயே

கட்புக் கொற்றிப் பெட்பிற் பற்றிக்
கவலைக ளிரிதர வுறைமறை பகர்கிளி
கர்ச்சித் தப்புத் துப்புத் துய்ப்பப்
பொழிபுய லெனவருண் மழைபொழி தவமுகில்
கர்ப்பப் பைக்குட் சிக்குற் றுத்தத்
துறுசிசு மறையவன் விடுசர முருவியும் உயிரோடே

போற்புற் றுச்சுற் றத்துக் கத்தற்
கிரவியின் வரவரு ளொருதிரு மகள்பதி
பொற்பட் டுச்சுற் றித்தற் றுத்தற்
புகல்புகு மடியவர் துயர்தபு கருமுகில்
புட்பத் தக்கச் செப்பக் கைச்சக்
கரமொளிர் பகன்மறை வுறவிடு நெடியவன் இளைபாமோ

## ௨௮ மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

புற்றுக் குட்புக் குத்திக் கெட்டுற்
றெளிர்பட ரியவனியை முடிகொளு மொருபணி
பொற்கைக் கட்டுப் பட்டுச் சுற்றிப்
புரளுத லொருவிட மணியணி புனையனை
புற்கைக் பற்றிக் கற்குட் பட்டுத்
திகழ்கரி கழைதினு மதுரையி னகரமர் உமையாளே.

(ந - ரை) துப்பு - வலி. அது வித்தையாகிய தெப்பம். அற்பிற் பெட்டு - அன்பினால் விரும்பி. அத்தற்செற்று - தந்தையைக்கொன்று. துட்டன் - மாபாதகன். அற்பு - அன்பு. பட்பு - பண்பு. அப்புத்துப்பு - நீராகிய உணவு. சிசு - பரிச்சித்து. துக்கத்து அல் - துக்கமாகிய இருள். தற்று-இறுகக்கட்டி. புட்பத்து அக்கம் - மலர்போன்ற கண். புற்கை - பனைபோன்றகை. கற்நட்பட்டுத்திகழ்கரி - கல்யானை.

பட்டு அற்றுக்கைத்துப்பட்டு இற்று அற்றுச் சிக்கித்தட்டுக்கெட்டு எழுபவக்கடல் புகுமடியேனென வியையும். ஞமலிபோல மருள்கொடு அத்தற்செற்று அன்னையொடு தழுவிய துட்டனெனக் கற்புக்கும் அன்புக்கும் பண்புக்கும் உயிரென்றது அவை உமையவளருளின்றித் தோன்றாமை நோக்கி. பணியொரு விடமணியணிபுனை யன்னை யென்றது பாண்டியன் மகளாக அவதரித்த காலத்துச் சர்ப்பாபரணமின்மையின். (௧௮);

தனதான தனதன தானன
தனதான தனதன தானன
தனதான தனதன தானன
தனதான தனதன தானன
தனதான தனதன தானன
தனதான தனதன தானன தனதானா.

இநமாது முதலிரு நால்வரு
மிசைமாது முனதிசை பேசுறு
செயல்காணி னவர்வயின் மேவுக
வெனவேவு பணிவிழி யாளுணர்
திறமேவி யருகுற வானவர்
புருகூத னயனொடு தானவர்

பணைநாகம்

திருமாலு மொருபுடை நாடொறு
மலர்தூவி வழிபட நான்மறை
தெரிவாரு முனிவரு மோர்புடை
புகழ்கூறி யயலுற நாரதர்
திரியாத தமிழிசை நூன்முறை
தனியாழி னமிழ்துறழ் மாணிசை நனிபாட

இருமாயை யிருவினை யாணவ
மிவைபோய மருளறு ஞானிகள்
இறவாத வுயர்மணி வாசக
னெழின்மேய சுகனென வீடுற
இசைமேய சிலர்புய லூர்தியொ
டுலகாளு மரசிவை யாதிய பெறநீடும்

எழுகோடி மறைகளு நூபுர
மிடுதூய மணியென வேயொலி
இருபாத கமலமு நாடுவ
னினிவாதை யிலநம னோடுவன்
எனையாவர் நிகர்பவ ராவெ
னிசையோடு வளர்தமிழ் பாடுவன் அடியேனே

ஒருகோடி வடமலை வானவர்
பதியோடி யதுபரி பான்மையின்
உயர்தூண நிரைநிரை சார்வுற
வொளிர்கூட நடுவுரை தூயரும்
ஒழியாது நிறைபொயும் வாய்மையி
னுறைவாத வலியுடை வாயரும் விவகார

உருவாகி நிலையழி பேயரு
முயர்நீதி புரிபவர் சூழ்சிறை
புறுசாலை புகவுரை தீயரு
முரைவாதின் விடுதலை மேவிட
உணவோடு கலைதருநேயரு
முறமேவு திருமலை நாயகன் உயர்மாடம்

 மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

மருவேம வரமனை நான்முகன்
வினையோநன் மயன்வினை போலென
மதிவாணர் சொலவுறு சீர்நிறை
வளமேவு மதுரையி னீண்மதில்
மதியோடு பொரவெழு கோபுர
மலர்மேய வயனுல கோடுற ஒருமீனும்

மருவாத வுயர்தட மூழ்குவர்
மயலோடு பிணிபவ மாய்வுற
மறையோடு தமிழிசை யாழியின்
மிகநாளு நிலவுறு கோயிலின்
வளர்தேவி பகவதி மாதவி
மகமாயி பரைசிவை யாரணி உமையாளே.

(கு - ரை) இரு நால்வர் - அஷ்ட லெட்சுமிகள். இசைமாது - கலைமகள். எழுகோடி - நம் முதலாய எழு அந்தங்களையுடைய மந்திரங்கள். வடமலை - மேருமலை. அது - வானவர்பதி. பரியான்மையின் - தாங்குகின்ற தன்மையொப்ப. கூடநடுவு உரைதூயர் - கூடத்திருந்து நடுவுரைக்கின்ற நியாயாதிபதிகள் (முன்சீப் ஜட்ஜுகள்.) பொய்யும் வாய்மையைப்போல உரைக்கின்றவாயர். (வக்கீல்) சிறைச்சாலை புகுமாறு நீதிபுரிபவருரைக்கின்ற தீயர் - தண்டனையடைந்தோர். நேயர் - விடுதலைபெற்றோர். ஒரு மீனுமருவாத்தடம் - பொற்றாமரைத் தடாகம். ஆழியின்மிக - கடலொலியினுமிகும்படி.

மேவுகவெனநீ விழியாலேவு பணியையுணர் திறமேவி இருநால்வருமாதும் அருகுற வானவராதியோர் வழிபடஅந்தணர் முனிவர் புகழ்கூறியயலுற நாரதர் யாழினிசைபாடஞானிகள் வீடுறச்சிலர் அரசாதிய பெறநீடிய பாதமெனவும்நூபுரமிடு மணியென எழுகோடி மறைகளு மொலிக்கின்ற பாதமெனவு முரைக்க.

தூயரும் வாயரும் பேயரும் தீயரும் நேயருமேவுதிருமலைநாயகனாமனை யென்க.

மதில் மதியோடுபொரக் கோபுரம் அயனுலகோடுறப் பிணிபவமாய்வுறத் தமிழிசை ஆழியின்மிக நிலவுறு கோயிலென்க. (கக)

தனன தாந்தன தனன தாந்தன தந்தான
தனன தாந்தன தனன தாந்தன தந்தான
தனன தாந்தன தனன தாந்தன தந்தான தனதான.

கரும நான்கிரு வகையும் வாய்ந்திடு மங்கோல
தருவி லாங்கதன் விரைய தூர்ந்துசெல் பண்போடு
கலைக டேர்ந்தவர் வசிய மோர்ந்துசெ யொண்சீர்கொள் நிலையாய

கடிய காந்தமொ டிருளி னோங்கய முன்போதல்
எனவு மேந்திழை தனது காந்தனொ டொன்றுப
கரும மெய்ந்துற லெனவும் வான்றரு முன்பேறு சொடியோலும்
அருளி னாழ்ந்திடி கடலி னீண்டுசெல் பொங்கோத
நதிகள் பாய்நதுற லெனவு பாண்கழ லன்போடும்
அடிய னேன்றன தகமு நேர்ந்துற வந்தேனுன் அருளாலே
அகில வாஞ்சையு முடலின் வாஞ்சையு மொன்றாமல்
மதுர மார்ந்தொளிர் தமிழின் மாண்கலை குன்றாமல்
அறிவி னாய்ந்தன திருப தாம்புய மும்பாட அருள்வாயே
பருவ வான்புயல் பொதியின் மாண்கிரி நின்றேபெய்
உதக மோங்கிய நதியின் மாண்பது குன்றாத
பயனின் மேம்படு வலிகொள் பாண்டியர் தந்தேயம் உறுவோரசெய்
பழமை வான்றவ முழுதுமீண்டிய பண்பேபோல்
உறுதி யாய்ந்தவர் கழக மோங்கிய வொண்கோயில்
பரவ வாழ்ந்திடு திரிபு ராந்தகி கங்காளி அபிராமி
மருவு மாங்குடி மருத னாய்ந்தொளி ருந்தூய
கபில னீண்டுயர் புகலி வாழ்ந்தவன் வண்கீரன்
மருவி லான்றவர் பலரு மீண்டிய ணிந்தோது புகழ்மேவு
வரைகள் சூழ்ந்தென விலைபுள் வாய்ந்துய ரும்போர்வின்
மறைய நீண்டுறு பழன மோங்கிய நங்கூடன்
மதுரை யாண்டுறை கவுரி சாம்பவியெண்டோளி உமையாளே.

(கு - ரை) அங்கோலதரு - அழிஞ்சின்மரம். அயம் - இரும்பு அகம் - மனம். கழகமோங்கியகோயில் - கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த மதுரைக்கோயில். புகலிவாழ்ந்தவன் - திருஞானசம்பந்தர். நான்கிருவகைக்கருமம் - வசிய முதலாய அட்டகன்மங்கள் அட்டகன்மத்துக்கு அங்கோலதைலமும், வசியத்துக்குக்காந்தமும் இன்றியமையாதன வெனமந்திரநூல்கூறும் அங்கோலதருவில் அதன்விரையூர்ந்து செல்பண்பென மந்தமாகவேனும் காந்தமுன் செல்லும் இரும்பெனத் தீவிரமாகவேனும் காந்தனோடு ஒன்றும் ஏந்திழையெனப்பேதமாகவேனும் தருமுன்பேறுகொடியெனப் பேதாபேதமாகவேனும் கடலிற் செல்லும் நதியென அபேதமாகவேனும் நினது கழலின்கண் அடியனேனது அகம் நேர்ந்துறவந்தேனென்க.

## ௯௨ மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

ஒன்றாமல் குன்றாமல் கலையை யாய்ந்துபாட அருள்வாயெனக.

பொதியிற்கிரியிற் புயல்பெய் உதகமோங்கியநதி - தாமிரபருணியும் வைகையையும்.

மருதன் முதலாயினார் அணிந்தோதியபாழ் மேவிய கூடலெனவும் பழனமோங்கியகூடலெனவும் போர்விண்மறைய நீண்டுறுபழனமெனவு முரைக்க.()

தனதன தந்தந் தந்தந் தனதன தந்தந் தந்தந்
தனதன தந்தந் தந்தந் தனதந்தந்
தனதன தந்தந் தந்தந் தனதன தந்தந் தந்தந்
தனதன தந்தந் தந்தந் தனதந்தந்
தனதன தந்தந் தந்தந் தனதன தந்தந் தந்தந்
தனதன தந்தந் தந்தந் தனதந்தந் தனதான

தழனிகர் பங்கந் தங்குஞ் சலசமு மென்பந் துஞ்சந்
தனகிரி யும்பொன் குன்றுங் கழையஞ்சஞ்
சனமத கன்றின் கொம்புந் தழைவுறு தெங்கம் பிஞ்சுந்
தளர்வுற வென்றும் பந்தங் கெடவொன்றுந்
தவர்களி னெஞ்சுங் கொன்றும் பணைமுலை நஞ்சந் தங்குஞ்
சரவிழி மஞ்சுங் குன்றுங் குழலொன்றந் தகமாதர்

சனிமக மொன்றும் பண்பொன் றியவள றங்கந் துஞ்சுந்
தகவினை யின்பென் றெண்கொண் டலைநெஞ்சந்
தளிர்நிகர்பண்பொன் றுன்றன்கழல்களிரண்டுங்கொண்டொண்
டவமுற வும்பண் டங்குந் தமிழ்கொண்டுன்
றனியிசை யொன்றுந் துங்கம் புகலவு நண்பும் பண்பும்
தழுவவு மின்புந் துன்புஞ் சமமென்றிங் கியமாதி

பழகவு மென்கண் கொண்டுன் றிருவடி கண்டுன் றொண்டும்
பயிலவும் வந்தென் றுன்பொன் றகமம்பொன்
படர்கன னின்றுந் துங்கம் பெறலிறினுளிர்ந்தன் பொன்றும்
படியுமு வந்தென் றுந்திங் களுமொன்றும்
படியடி நின்றும் பொங்குங் கனலறெ ழும்பும் பண்பும்
பயனொடு தந்தென் பந்தங் கெடநின்றிங் கருள்வாயே

பரசிவன் வெண்சங் கங்கொண் டுறுமரி கஞ்சந் தங்கும்
பகவ னனந்தங் கண்கொண் டவனண்டம்
படர்சுரர் சந்தந் துன்றுங் கிரியுறு துங்கன் சங்கம்
பரவிய வொண்பண் பொன்றுந் தமிழ்கொண்டும்
பயின்மறை கொண்டும் பண்கொண் டிசைகழ லென்றுந் தங்கும்
பரிசுற நெஞ்சங் கொண்டந் சுகர்துன்புந் தவிர்வேனே

கழகமுன் வந்தங் கொண்பொன் றருமிகை தந்தன் பொன்றுங்
கவுரியர் துன்பம் பொன்றும் படியின்பங்
கருதிய வன்பென்றெண்கொண் டுறுமொழி முந்தும் பண்பொன்
றுறுபது சந்தந் துன்றுங் கவிதங்கும்
களவியல் சங்கங் கொண்டின் புறவரு ணய்பன் பங்கின்
கவுரித ரங்கந் துன்றுங் கடலுண்கண் கலையூர்வாய்

கவுணியர் துங்கன் சந்தந் தழைகவி கொண்டுன் கொண்கன்
கழல்புக முன்பந் தம்பொன் றமிழ்தங்கண்
கடிதருள் சிங்கந் துன்றும் பகவதி நிம்பந் துன்றங்
கயல்விழி யண்டந் தந்தெங் கணுமொன்றங்
கணைபரை யென்றுந் தங்கும் புகழ்வளர் சந்தங் கந்தங்
கமழ்முனி குன்றந் துன்றுந் தமிழ்கொண்டிங் குயர்கூடல்

சுழலுறு பஞ்சென் றெங்குந் திரிபவர் புன்கண் பொன்றுந்
தொழில்வள மென்றுந் தங்கும் பதிவந்தெந்
துயர்தபு பண்பொன் றுஞ்சண் டிகையனை பண்டுந் தொண்டன்
சுதையென முன்பங் கண்சென் றுறுமண்டந்
தொழுசிவை யின்றுந் தொண்டின் பரிசுக ளின்றுந் தஞ்சந்
தொடருமென் முன்புஞ் சென்றம் பதகஞ்சந் தருதேவி

சுடலையி னின்றுந் தொங்குந் தொடலையி னம்பொன் பெண்டுந்
துகளென முன்கண் டங்கந் தனையும்புன்
சுமையென நெஞ்சங் கொண்டுன் கழலடி நம்புந் திண்மைந்
துறைபுகு பண்பொன் றந்தண் டவரென்றுந்
துதிசெய மன்றந் தங்குந் திருநட னங்கொண் டைந்தென்
றெழிலுட னென்றுந் துங்கந் திகழின்பொன் றுமையாளே.

(கு - ரை.) பங்கம் - சேறு. சந்தனகிரி - பொதியில். கழை - மூங்கிற் கோல். அளறு - நரகம். அனந்தங்கண் கொண்டவன் - இந்திரன். கவுரியர் - பாண்டியர். களவியல் - இறையனாரகப்பொருள். கவுணியர் துங்கன் - திருஞானசம்பந்தர். அமிழ்து - முலைப்பால் நிம்பம் - வேப்பமாலை. அங்கயல்விழி-அங்கயற்கண்ணம்மை, இது இயற்பெயர். முனிகுன்றம் - அகத்தியர்மலை, பொதியில். புன்கண் - துன்பம். தொடலை - மாலை. துறை - தவத்துறை. பங்கந் தங்குந்தழல் நிகர் சலசமென்க.

சலசமும் பந்துங்கிரியுங் குன்றும் கொம்பும் பிஞ்சும் தளர்வுறவென்றும் தவமுடையார் நெஞ்சையுங் கொன்றும் பணைத்தமுலையென்க.

முலையும் விழியும் குழலுமொன்றிய அந்தகர்போன்ற மாதரென்க.

மகத்துற்ற சனிபோலக் கேடுபயக்கின்ற நிரயத்திற்கேதுவாகிய மாதராது அங்கமென்க.

அங்கந்துஞ்சுந்தகவினை யின்பென்று மயங்கியலைகின்ற என்னெஞ்சம் தவமுறவும் புகலவும் தழுவவும் பழகவும் பயிலவும் நீ என்முன் வந்து, என்துன் பொன்றிய அகம் பொன் கனலினின்றுந் துங்கம் பெறல்போல ஒளிர்ந்து அன்பொன்றும் படியுமுவந்து ஒன்றும்படி பண்பும் பயனொடு தந்து, என் பந்தங் கெட என்னுள் நின்று அருள்வாயென்க.

சிவன் முதலோர் தமிழ்கொண்டும் மறைகொண்டும் பண்ணுடனிசைக்கின்ற நின்கழலைப் பரிசுறும்படி நெஞ்சங்கொண்டு துன்புந் தவிர்வேனென்க.

கழக முன்வந்து தந்து பொன்றும்படி இன்புற அருள் நம்பனென்க. இன்பங்கருதிய களவியலெனவும் அன்பினைந்திணையென்னும் எண்கொண்டுறுமொழி முன்னின்ற களவியலெனவும் அறுபது சூத்திரங்கொண்ட களவியலெனவு முரைக்க.

கவுணியர் துங்கன் கவிகொண்டு உன்கொண்கன் கழல்புக அவற்கு அமிழ்தருளிய பகவதியென்க. கூடலாகிய பதியில்வந்து துயர்தபு சண்டிகையென்க. முன் ஒரு தொண்டன் முன்பு அவன் மகளெனச்சென்ற சிவையே இன்று தொண்டின்றியும் கருணையால் பதமலரளித்த தேவியே யென்க.

மண்பெண்ணுறியன சுடலை மாலைபோலத் துகளுடையனவென் றறிந்து உடம்பும் புன்சுமையென உணர்ந்து அவற்றை நீத்து உன் கழலடி நம்புந் தவரென்க. (உக)

தாத்தன தத்தந்தந் தானன தானன
தாத்தன தத்தந்தந் தானன தானன
தாத்தன தத்தந்தந் தானன தானன தனதானா.

பாற்கட லுற்றுஞ்சிந் தாமணி யாதிய
எற்றிடல் விட்டுண்புன் நீனிகொண் மீனிகர்
பாகுகிய முற்றொன் றுந் தேர்கலில் யானுன தருடோய்சார்

பாற்கழல் பெற்றும்பொன் றாவுயர் வீடது
வேட்டிட லற்றம்பொன் றேடியும் வானுறு
பாற்படு மொட்பங்கொண் டாரமு தாரினும் அமையாதே

தோற்கழல் பற்றும்பண் பேயுறு நாயென
வாய்த்திடு முச்சங்கந் தோய்தமிழ் வாரிதி
தோற்றமு தட்கொண்டுந் தீயபெண் மாசுறு பயமேமேதாய்

தோற்பையை மற்றுங்கொண் டாடியும் வேனிலின்
மார்க்கம டெக்குந்திண் கானலொண் மானெதிர்
தோற்றிட முற்றுங்கண் டோடலின் வாடியு முழல்வேனோ

கார்க்கட லிற்றங்குஞ் சீர்திகழ் மேனிகொள்
பார்ப்பதி கற்கண்டுந் தேனுநெய் பாலொடு
காய்ச்சிய நற்பண்டம் போலினி தாகிய கவிமாலை

கார்ப்புயன் மொய்த்தெங்கும் போயுற வேபொழி
தோற்றம தொத்துன்றன் றாண்மலர் பூணவொல்
காப்பணி யொத்தென்றும் பாடவு நாடவும் அருள்வாயே

போர்க்கெழு செற்றங்கொண் டேயிகல் வார்களும்
ஏத்துறு நட்பொன்றுஞ் சால்புற நூல்பல
பூத்தெழு நுட்பங்கொண் டேமனம் வாழ்வுற நினதாளே

போற்றிட வத்தந்தந் தோகைகொ ளீகையின்
ஏற்றமொ டச்சங்கொண் டேயுற நானுறை
போக்கறு மெய்த்தொண்டின் பாடல்கொள் கூடலின் உமையாளே.

(கு - ரை.) பாக்கியம் - ஊழ். கழல் - செருப்பு. பயம் - பால், அச்சம். மீனிகர் யான் பொன்தேடியும் நாயெனக் கொண்டாடியும் மானோடுதல் போல ஓடிவாடியு முழல்வேனோ என்க.

பணியொத்து உன்றாள் பூணுமாறு புயல்பொழி தோற்றமொத்து நான் கவிமாலை பாடவென்க.

சால்புறவும் வாழ்வுறவும் போற்றிடவும் எற்றமும் அச்சமுங் கொண்டுறவும் நானுரைத்த பாடலைக்கொண்ட கூடலென்க. (உஉ.)

## ௬௯ மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

தனதானன தானன தானன
தனதானன தானன தானன
தனதானன தானன தானன தனதானு

உடலாதிய சூனிய மாமுன
திருதாள்களு மேபொரு ளாமென
ஒருவேளையி லேதெளி வேனினி ஒருவேளை
உயிரேதுயி னேழ்பவ மேதருள்
முதலேதென வேமருள் வேனினி
ஒருவேளையி லேயெது வோவென நிரையாயர்
மடவார்தயி ரேகடை போதுறு
கயிறேயென வேயொரு பாலினும்
மருவாதயிர் பான்மைய னுருவன் இதுவேயென்
மதியாமெனின் யானுயு மாறெவன்
மகராசகு மாரியுன் மாணடி
மறவாவர மேதரு வாயெதிர் வருவாயே
வடபால்வரை சாபம தாகவும்
விடவாசுகி நாணென மேவவும்
வளையாரணி நாரணி பூரணி அபிராமி
மதுராபுரி மேவுத டாதகை
கருணாகரி காளிபு ராதனி
மகராலய மேதுயின் மாதவி கவுமாரி
குடபால்வரு மோர்பிறை சூழ்குழல்
மகமாயிம னோன்மணி யோகினி
குமரேசர்க சானனர் தாமடி தொழுதாயே
குறியாதுமெ னேர்வரு கோமளா
உருவேயரு வேயரு ளேமதி
குலமேவிய தேவிகு ணாகரி உமையாளே.

(கு - ரை.) பொருள் - மெய்ப்பொருள். முதல் - கடவுள். அயிர்த்தல் ஐயுறல். வடபால்வரை - மேருமலை. மகராலயம் - கடல்.

மகராலயமேதுயில் மாதவியென்றது உமையவளேதிருமாலாகவுருக்கொள்ளல் நோக்கி. பிறைசூழ்ந்த குழலெனவும் பிறைபோன்ற நெற்றியைச்சூழ்ந்த குழலெனவுமுரைக்க. (௨௩).

## மதுரை மீனாட்சியம்மை சந்நிதித் திருப்புகழ்



6717

தனதானன தத்தத் தத்தன தனதானன தத்தத் தத்தன
தனதானன தத்தத் தத்தன தனதானன தத்தத் தத்தன
தனதானன தத்தத் தத்தன தனதானன தத்தத் தத்தன தனதானா

மருளேதமில் சித்தத் தற்புத
மனுவோதிய ருச்சித் துத்தம
வழிபாடுசெய் பத்தர்க் கெட்டொடு
முறழ்நாலிரு வர்க்கத் துக்களை
வசியாதிய வெட்டுத் தக்கன
வணிமாமுத லெட்டுச் சித்திகள் மகவாதி

வகையாமொரு பத்துப் பற்பல
திருவார்பத முத்திக் குய்த்திடு
வழியாகிய வெட்டுத் துக்கமி
லுபயோகிய லெட்டுத் திக்கையும்
வசமேசெயும் வெற்றிப் பெட்புற
வுரைநாவல மற்றொட் பக்கவி புகன்மேன்மை

அருளாலுயர் சிட்டர்க் கிட்டமும்
வெருளாவிழி துட்டர்க் கச்சமும்
அடைவேதரு மொப்பற் றுத்திக
முசைவாய்மையு மற்றைத் திட்பமும்
அவர்தாமுறு பெற்றிக் கொத்துட
னருண்ஞானவ ரத்தப் பொற்கழல் யணிவேனோ

அடியேனையு மற்பிற் றக்கவர்
குழுவோடுற வைத்துப் புத்தியின்
அசைவேகெட வுட்புக் கற்பர்க
ளறியாதுசெய் தப்பிற் குச்சினம்
அடையாதொளிர் செப்பத் தற்றுன
இசைபாடிவ முத்திப் பொற்புற அருள்வாயே

குருவாய்வட முற்றுக் கற்றவ
ரொருநால்வர்ம னத்துப் பற்றிய
குறையாவுமு டித்துச் செப்பரு
மறைஞானமு ரைத்துத் தெற்குறு
குறுமாமுனி வற்குப் பொற்பமை
தமிழோதிய கற்றைப் பொற்சடை அருள்வாரி

## ௩அ மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை.

குணமாநிதி முக்கட் செக்கரி
னூறுமேனியன் வெற்றிச் சத்திகொள்
குகன்வாய்வரு மர்த்தத் துக்கக
மகிழ்வாமன்ம கத்திற் றக்கன்மெய்
குறைவீரன்ம றைக்குட் புக்கதன்ற
யறவோன்மழு வத்தத் திற்றிகழ் பரமேசன்

மருவார்புர முற்றச் செற்றவ
னிலமாதிய வெட்டுப் பெற்றிமை
வடிவாயவ னெட்டெட் டுத்திரு
விளையாடல்செய் கொற்றத் துப்பல
வளமேவிய முத்திப் பொற்பதி
மதுராபுரி யிச்சித் துற்றெளிர் தமிழ்மாதா

மலயாசல முற்றுப் பொற்புறு
மொருராவண னச்சத் திற்றமிழ்
வளநாடது விட்டுத் தெற்குற
விடுமாமுனி யர்ச்சித் துத்தொழு
வளர்மீனுறு வெற்றிப் பொற்கொடி
யுறுமேவிக யற்கட் பத்திரை உமையாளே.

(கு - ரை) மனு - மந்திரம். எட்டொடு முறழ்காலிருவர்க்கத்துக்கலை - அறுபத்து நான்கு கலைஞானம். வசியாதியவெட்டு - அட்டகன்மங்கள். மகவாதி வகையாறெடுபத்து - பதினாறுபேறுகள். பற்பலதிருவார்பதம் - இந்திரன்முதலிய இறையவர்பதங்கள். எட்டுயோகியல் - இயமாதியட்டாங்கயோகங்கள்.

சிட்டர்க்குஇட்டமும் துட்டர்க்கு அச்சமுந்தருமுறை - சாபானுக்கிரக சத்திவாய்ந்தசொல்.

வடம் - ஆலமரம். நால்வர் - சனகாதியர். நிலமாதியஎட்டு - ஐம்பூதம் இரவி மதி ஆன்மா என்பன. எட்டெட்டுத்திருவிளையாடல்-அறுபத்துநான்கு திருவிளையாடல்.

தெற்குறவிடுமுனி - இராவணனைக்கந்தருவத்தாற் பிணித்துத்தமிழ் நாட்டியங்காவண்ணந்தடுத்து அதற்குத்தெற்கே செல்லும்படி விடுத்த அகத்திய முனிவர்.

பத்தர்க்குக்கலையும் தக்கனவும் சித்திகளும் மகவாதியவும் பதமும் யோகியலும் வெற்றியும் நாநலமும் கவிபுகல்மேன்மையும் இட்டானிட்டந்தரும் உரைவாய்மையும் திட்பமும் அருள் கழல் பணிவேனென வினையும். சிவன் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்தபதியாகிய மதுராபுரியென்க. (உ௪)

தனதாத்தன தத்தத் தத்தன
தனதாத்தன தத்தத் தத்தன
தனதாத்தன தத்தத் தத்தன தனதானா.

அறநீத்திடு சித்தக் கற்பிலர்
மயலாற்செயல் கெட்டுத் தூர்க்குண
மதுவாய்த்திட வூற்றுப் பற்பல துறையேபோய்
அவமாய்ப்பிணை மொத்துக் கற்றவர்
புகல்வார்த்தையும் விட்டுப் பத்தினி
அகம்வேர்ப்பம ருட்டிப் புத்தமு தெனமாழ்கி
உறவார்த்தக டற்பட் டுப்படர்
அரன்வாய்ப்படு நச்சுக் கொப்பென
ஒருமாத்திரை யிற்றுக் கக்கடல் புகவேசெய்
துணர்வோட்டவ ரக்கத் திற்புரள்
சிறுநோக்கவ லைக்குட் சிக்கினும்
உனதாட்டுணை யர்ச்சித் துத்தொழல் மறவேனே
திறவாக்கத விற்குட் புக்கொளி
கலர்பாற்புக ழுற்றுப் பொய்ப்புகழ்
தினமேத்திவ யிற்றுக் குத்திரி புலவீர்காள்
சிவனார்க்குழு வப்புற் றுப்புவி
தருமாற்றல்ப டைத்துப் பொற்பொடு
திகழ்பார்ப்பெண்மு கத்துக் கொத்தொளிர் உயர்கூடல்
பிறவாக்கதி சித்தத் துற்றொரு
தரமேத்தினு முற்பட் டுத்தரு
பெருமாத்தளி யுற்றிச் சித்தன பெறுவீர்நீர்
பெரிதேத்துமி னற்பிற் பொட்டென
எனநீத்தவர் பற்றிப் புக்கருள்
பெறுமார்க்கமு ரைத்துப் பற்றுறும் உமையாளே.

(கு - ரை). திறவாக்கதவு - இரவலர் நுழையாவண்ணம் அடைத்துவை க்குங்கதவு. கதவு இல் - அக்கதவினையுடைய வீடு. கலர் - கீழ்மக்கள்.

புலவீர் இச்சித்தன பெறுவீர் கூடலின்கண் மாத்தளி யுற்றுப்பொட்டெ ன ஏத்துமின் என அருள் பெறுமார்க்கமுரைத்து நீத்தவர் பற்றுறு முமை யாளே எனக். (உ௫)

தனதன தந்தன தத்தன தனதன தந்தன தத்தன
தனதன தந்தன தத்தன தனதான.

அறுசுவை யுண்டிவி ருப்பிலன் மதியமு தும்பின்ம லர்க்கழல்
அடையவி ரும்பின னுத்தர மொழிவேதம்
அதனினு மிஞ்சுசி றப்புறு தமிழ்மறை சிந்தையு ணர்த்திநி
ரதிசய துங்கவ டித்துணை அருள்வாயே
குறுமுனி முன்புகல் சித்தர்கள் வழிவழி கொண்டும றைத்துரை
குலவிய வந்தம கத்துவ மறைமேவு
குறிபல கொண்டுவெ ளிப்படர் குரைகழல் கண்டும னத்தொரு
குறைவுமி லன்புநி றைத்திசை புகல்வேனே
நறுமண மொன்றுகு ழற்புயல் பிறைமதி நின்றுசு டர்ச்செய
நகைவிளை துங்கவெ யிற்றொளி தவழ்தூய
நவையறு கஞ்சமு கத்திரு குவளைய லர்ந்துத ழைத்துற
நலமுடன் வந்தெனை கத்தொளிர் சிவகாமி
மறுவறு மிந்துகு லக்கொடி வரைசுதை யங்குச நற்கழை
வளைவிலொ டைந்தும லர்க்கணை யொடுபாசம்
மலர்நிகர் செங்கையு றத்திகழ் கவுரிதி கம்பரி கொற்றவை
மதுரைவ ளர்ந்தக யற்கணி உமையாளே.

(கு - ரை) உத்தர மொழிவேதம் - ஆரியவேதம்.

உன்கழலடைய விரும்பினன். அதற்கேதுவாகிய தமிழ்மறைப் பொருளுணர்த்தி அடித்துணையருள். அருளின் அம்மறையிற்சொல்லிய குறிகொண்டு கழல்கண்டு அன்புநிறைத்து இசைபுகல்வேனென்க. (உசு)

தானதந்தன தானதந்தன
தானதாந்தன தானன
தானதந்தன தானதந்தன
தானதாந்தன தானன
தானதந்தன தானதந்தன
தானதாந்தன தானன தனதானா.

யோகமந்திர வாதமுந்துணை
யாமுபாங்கமு மார்தமி
ழூடுறும்பரி பாடைகொண்டுயர்

நீண்மியேந்திர மாமலை
யோகிசந்திர சேகரன்றவ
நாதர்வாழ்ந்திட வோதிய மறைநிதேரும்

பூகமும்பிற தூயசெந்தமிழ்
நூலும்வான்சுர ரோடுவி
யோமவிந்திர ஞாதிபுங்கவர்
மேன்மைவாய்ந்திட வேபகர்
யூபமந்திர வேள்விகொண்டுயர்
சாகையோங்கிய வேதமும் வழியாக

மோகமென்பது போயவந்தண
ரோதுமாண்பெறு நூல்களும்
மூலமந்திர மோதியெண்பெறு
கோணமோர்ந்துணை நாடிடின்
மோடுநின்றய லாழ்குளம்புகு
நீரின்வாய்ந்துற வேதரும் அருள்பாடி

மோனமொன்றிய தூயவன்பர்கள்
சார்புநான்புகு மாறருள்
மூவருந்தொழு ஞானநன்கழல்
பாடிமாண்புகழ் பாடியுள்
மோதிநின்றெழு காமவெங்கனல்
கோபமாந்தழன் மோகமும் காரிகைமீனா

நாகமண்கனல் காலிரும்புனல்
யாவுமாய்ந்திடு நாளினும்
நாதர்செஞ்சடை யீசர்சுந்தரர்
பாகம்வாழ்ந்திரு வீர்களும்
நாநலம்பெற வோதுசெந்தமிழ்
மேயபாண்டியன் வேள்வியின் வர தனி

நாரியம்பிகை காளிசண்டிகை
வாலைசாம்பவி நாரணி
நாககங்கணி பாலைதங்கிய
யாளியூர்ந்திடு வாமிமுன்
ஞால்காந்திக மேகதந்தன்முந்
நாலெண்வாய்ந்திடு தோளினன் விறல்வீரன்

மேகமொன்றுரு வாரரன்றிரு
நாதனீன்றருளாரியன்
வேகமொன்றிய ஞாளியென்பரி
யேறுவோன்பணி தாய்பரை
வீரியந்தரி ஞானசுந்தரி
மாதுகாஞ்சன மாலையின் மகளாய்!

வேதமுங்கவி நீலகந்தர
மார்புராந்தகி வாணொடு
வேறுமென்சிலை பூவினைங்கணை
சூலமேந்திய மாதவி
மேவிதங்கிய கார்வளந்திகழ்
கூடல்வான்பதி மேவிய உமையாளே.

(கு - ரை) உபாங்கம் - கற்ப சிற்ப சோதிட வைத்திய சாமுத்திரிக முதலாயவை. பிறசெந்தமிழ்நூல் - தொல்காப்பியமும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை பதினெண் கீழ்க்கணக்கு முதலாயவும். வழியாகவோது நூல்கள் - வேதத்தின்வழியாக வோதிய மிருதி புராணாதிகள்.

யோகியாகிய சந்திரசேகரன் மயேந்திரமாமலையில் அகத்தியர் முதலாய தவநாதர் வாழ்ந்திடத் தமிழ்ப்பரிபாடை கொண்டு ஓதியயோகம் மந்திரம் வாதம் உபாங்கம் பொருந்திய தமிழ்மறைதேரும் பூரமும், பிறதமிழ்நூலும் வடமொழிவேதமும அதன்வழிநூல்களும் நாற்பத்து முக்கோணமுதலாய எண்பெறுகின்ற கோணங்களை யறிந்து உனனை நாடிடின் மேட்டிலிருந்து அயலிலுள்ள ஆழ்ந்தகுளத்திற்செல்லும் நீர்போல வாய்ந்தறற அத்தமிழ் மறைமுதலாயவற்றை யடியார்க்குத் தருகின்ற அருள்பாடி யென்க. (௩

தனனதந்தன தனனதந்தன தனனதந்தன தனதன
தனனதந்தன தனனதந்தன தனனதந்தன தனதன
தனனதந்தன தனனதந்தன தனனதந்தன தனதன தனதானா.

மதனைவென்றது நடுவணொன்றிய
விருவிர்தப்போது விழியினின்
மருவுமெங்கன லெனிலரன்றிற
லரையதென்பது புதிதிலிவ்
வகைதெரிந்திடி னுவகைதுன்றுநன்
முகமனன்புரை கொடுமதன் உடல்வேணி

## மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை - சங்

மதிபுனைந்தவ னெரியவென்றன
னெனமெயன்பர்கள் பலபல
வரைவதுந்தகு மெமனையென்றது
சிவனிடந்திகழ் பதமென
மறைதெரிந்தவர் புகல்வரங்கது
நினதுபங்கய பதமெனல் எவர்தேரார்

இதுதெரிந்திடி னனையவென்றியி
லமலர்பங்கில ரெனலுமெய்
எமனையென்றதொ ரிசையின்விஞ்சிய
விசையு முண்டுகொ லுலகினில்
இதுநினைந்துன தரியவென்றிகொ
ளடிபுனைந்திட வுயர்களி பகர்வேனே

எனையுமன்புறு நினதுதொண்டரி
னருகிருந்திட வினிதருள்
எளியனென்கவி தனையுநன்கவி
யெனவிழைந்திரு பதமலர்
இணைபுனைந்தரு ளனையநன்கவி
புகலுமன்பர்த மிடர்கெட [illegible]ள்வாயே

விதுவுமென்றுடு சுரர்புரந்தரன்
விதியுமன்பதை யுலகமும்
விரிபெருங்கட லுயர்பொலன்கிரி
யுரகருங்குல வரைகளும்
வெளியுமங்கியு மொருபுறங்கரு
வெனவிருந்தொளிர் வயிறுடை ஒருதாயே

விமலர்பங்குறை யுரககங்கணி
சிவைநிரஞ்சனி வினைகெட
விரைவில்வந்தென தகமுறும்பரை
குமரிசங்கரி நிருமலை
விமலையெண்குணி கவுரிசண்டிகை
விசையையம்பிகை திரிபுரை தனியாழீ

பதுமவொண்கர முறுதிகம்பரி
யலைதுயின்றிடு பகவதி
பரவிவந்தனை செயுமொரந்தணன்
மகளெனும்படி யவனொடு
படருமங்கரி பசியினைந்திடு
முயிர்களின்புற வருளிமெனல் இநகாழி

படியளந்துள மகிழுறப்புரி
தருமமின்கொடி சரவண
பவனைவண்டமிழ் மதுபரையம்பதி
யரசெனும்படி தருமொரு
பரமசுந்தரி கவுரியன்பெறு
தனையையன்புறு கயல்விழி உமைபாலே.

(கு - ரை) பொது விழி - நெற்றிக்கண். முகமன் - உபசாரம். விது - சந்திரன். என்று - சூரியன். விதி - பிரமன். பொலன்கிரி - மேருமலை.

அன்பர் உவகை பொருந்திய முகமனுரையும் அன்புரையுங் கொண்டு மதனுடல் எரிய மதிபுனைந்தவன் வென்றனனென வரைவதுந்தகும் என்க. (௨௮)

தனதந்தன தானதன தனதந்தன தாத்தத்தன
தனதந்தன தானதன தனதந்தன தாத்தத்தன
தனதந்தன தானதன தனதந்தன தாத்தத்தன தனதான.

குகைமுன்படை யோராயிர நரர்தங்களை மாய்த்துத்தின
வருசண்டனை நேர்பூதமெய் கிழியும்படி யேத்தித்தொழு
துறையொன்றுமி லார்கீரர்மு னுயர்செந்தமி ழாற்றுப்படை புகல்காலை
குலைபுங்கலை சோர்வார்கர மெனவந்தயில் வேற்கைப்படை
விடுபுங்கவ னோராவென துரையுஞ்செவி யேற்றுக்கடல்
குடிகொண்டெழு தீயேகிதர் டயவெங்குகை சேர்த்துத்தினம் உடல்சோர
கனைகொன்றுணர் வோடீவது தபவந்தெழு கூற்றக்கடன்
ஒழியும்படி நூறுயிர முயர்செம்பொன்மண் மாற்றித்தரு
நறவம்படு பூவார்கழ லெனதொண்டலை சூட்டிப்பணி புரிவேனோ
கலமொன்றறி யேனுயினு முனதன்பர்கள் கூட்டத்தொடு
பழகும்படி தானேயரு ளெனதென்செயல் போக்கித்துதி
நவிலும்படி நாமீதொரு கலைமங்கையை காட்டித்தவம் அருள்வாயே

ஞானநேத்திரமுமுடையவனெனதையு நாடியேகலமுறக்காண்டற்
கானவனென்றுபகருவருலகோ ரழுகொடுமுழுக்கலன்றுறந்து
மானதவிழியாற்குறித்ததுகாணுவகையினற்பொய்யெனத்தெரிந்தேன்
வானவாதிதமும்பணிபெருந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (௯௨)

எண்ணியவுருவங்கொண்டுலகத்தோ ரெண்ணியயானையுமளிக்குந்
திண்ணியகுணத்தானென்றுரைதருவர்சேலவிழிதிகைத்திடாவகைக்குக்
கண்ணியொன்றளிக்கக்கருதிடாமையினற்கைதவனுமெனக்கொண்டு
மணணியமாடஞ்சேர்ந்தனடருமை வாழ்சிவஞானதேசிகனே. (௯௩)

அடியவர்பிழையைக்குணமெனக்குறிக்கு மவாவினனென்பதுதீரத்
தொடிநெகிழ்ந்துடையுஞ்சோர்ந்துபின்குழலுந்தொங்கிடநின்பெயர்பலவாப்
படிதனிலுரைத்தனேக்கியேநீயும பார்த்திடாதவனெனச்சென்றாய்
வடிமலிமலரினாதனத்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (௯௪)

பேதையின்மனதிலெழுந்திடுங்காமம் பிறங்கியநாளருளாமல்
வாதையாம்புணரிவீழ்ந்ததிலழுந்தி மயங்குறுகாலையில்வந்து
கோதையைத்தந்தாலெங்ஙனஞ்சகிப்பாள் கொடுமனற்கீந்தனமாகும
மாதைவென்மனத்தார்செறிந்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே.

பொதியினில்விளையுஞ்சந்தனக்குழம்பு பூசவும்புலர்ந்தனசெய்ய
பதியினின்மாடத்துளமலர்மாலை பரித்திடவெரிந்தனவென்றாற்
கதியினிற்சேர்ப்பதெங்ஙனமாகுங் கண்ணிடைநுழைந்திதுசெய்தாய்
மதியினின்முதியோர்துதிதருந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

அருந்தவமபலநாட்செய்தியான்பெற்ற வமுதமேயொத்தவன்மனுகிற்
கருந்தடங்கண்ணீர்சொரிந்திடமனமுங் கரிந்திடத்திருவுருக்காட்டிப்
பெருந்தவமுடையார்சூழ்ந்திடச்சென்ற பெற்றிமைபவாயினுலுனைக்க
வருந்தினளருள்வாய்நிதிவளர்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

யோகனுமுருவங்கொண்டருளுன்னை யொருமுறைமார்புறத்தழுவிப்
பாகமாரிதழைச்சுவைத்திடநினைத்த பாவைபாலருடராமையினற்
சாகசமுடையாரென்பதுதெரிந்து சாந்தமார்மாளிகையடைந்தாண்
மாகனர்பரவிமறைசொலுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (௯௮)

இன்றெனதன்னையெழுகடலாட விசைந்தனனெனச்சொலியிரக்க;
நன்றெனமகிழ்ந்துவருத்திநற்போக நங்கையருனைக்குதவினையாற்
றுன்றியபாசக்கடலினைவேண்டாத் தூர்த்தனையாளுதலரிதோ
மன்றுகள்பலவாவிளங்கிடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (௯௯)

மனதினாற்செய்யலாகுமானதமும வாக்கினாற்செய்யுமவாசிகமுந்
தனதுடலாற்செய்காயிகமுஞ்சொற் றன்மையான்கண்டிலேனின்று
வினதருளாலம்மூன்றையுமடைய வினைத்துவந்தடைந்தனனருள்வாய்
வனபதிதோயமதில்வளர்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (எ0)

மும்மலமுடையயானையைக்கூடன் முதுபதியிடத்தினிற்கெடுத்துச்
செம்மலென்றொருபேர்பெற்றநீரின்று செப்புதற்கரியனமூன்றும்
வெம்மலமுடையயானையாமனதில வீற்றிருந்தருளுதலரிதோ
மம்மல்சேராதார்தங்கிடுந்தருமை வாழசிவஞானதேசிகனே. (எக)

சேரும்வற்கடகாலத்தினின்மதுரைத் திருநகர்செழித்திடவுலவாப்
பேருடைக்கோட்டையளித்தருள்புரிந்த பெற்றியனுதலாலெனக்குக்
கூருமிவ்வறுமைநீங்கிடச்செய்தல் கூடுமென்றடைந்தனனருள்வாய்
வாருலாங்கொங்கைமாதுசேர்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

மதுரையைச்சிவலோகமெனச்சொல்ல வரகுணனன்பினுக்குருகி
விதிமுறையிற்செய்தவனருட்டிறத்தை விளக்கினைநீயெருந்தருளுந்
துதிமலிநகரொவ்வுலகமென்றியாவர் சொல்லுவாரகலைபலநிறைந்த
மதியுளார்கழகஞ்சூழ்ந்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (எ௩)

வஞ்சிமன்னவன்றன் கண்களித்திடநீ வரைந்திடுதிருமுகஞ்சென்றே
யெஞ்சியபொன்னைப்பெறச்செய்ததுன்னினைவிடாவொன்றுதன்விழியின்
மிஞ்சியவொன்றின்கடையினுலடியேன்மிடியினைத்துரப்பதோர்பரமோ
மஞ்சிவர்மதில்சேர்ந்திடுபெருந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

அருவியின்முத்தவடமழகிடலா லடியராம்பசுநிறைந்திடலாற்
குருமணியனந்தங்கையுறுதலினாற் கோதில்கற்பகமுறுதலினாற்
கருவியாஞானமலையெனவுன்னைக் கழறுவாரதுதெரிந்தனனுன்
மருமலர்ச்சோலைசெறிந்துறுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

அகவிருடிரக்குமந்திரமுளதா லவ்விடத்துள்ளதாம்பங்கே
ருகம்விகசித்துமருவலாற்பெரிய வொளிவிரிந்திடுதலாலுன்னை
யிகமிகுஞானசூரியனுமென் றியமபுதறகுதியேயாகு
மகமிகப்பனவாபுரிந்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (எசு)

சாந்தமாறெழலாற்றருமடக்கத்தாற் றழைந்திடுதண்ணியகுணத்தாற்
சேர்ந்ததுண்பொருளைவெளிப்படுத்தலினாற் றீவரவறிவினர்கூடி
யேந்தனிகடலையொப்பவனேயென் றெண்ணுவாரதுதகும்பொங்கும்
மாந்தளிர்மேனிமடந்தைசூழ்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

கோலமார்வாதவூரடிமகிழக் குருந்தடியிற்றிருந்ததும்பொன்
ஞாலமேபணியும்பனைசைவாழ்சாமி நாதமாமுனிவர்தம்பிரானா
சீலமோடமர்ந்துகணகளித்திட நீசிறப்பினிற்கொலுவிலவிற்றிருந்தாய்
மாலதைமொழித்தார்துதித்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே.()

சந்நிதிக்கண்வந்தடிபணிவார்க்குத் தழைந்திடுகாமதேனுவினைப
பன்னிடுமணியைவளர்ந்திடுநிதியைப பகர்ந்திடுகற்பகதருவை (தான
முன்னியசகலபோகஞ்சேர்பொருளை முனிவிலாதளிப்பன்பின்வெறுத்
மன்னியமுத்திவழங்குவன்றருமை வாழ்சிவஞானதேசிகனே. (எக)

நாயகன்மடியிற்சொற்சுவைநிமித்த நானிலம்படைத்தளித்தழிக்குந்
தூயவள்வாச்செந்தமிழினைச்சொற்ற தமதடியார்தகைநாடி
நாயகின்பெருமைதனையெமபோலியரு மறைந்திடத்தக்கதுமாமோ
நாயவணிதமுமபணிந்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (அ0)

கூடவர்நடுங்கத்துணைவிளக்கெரியுங் கண்களார்சிம்மத்தின்வெரிநிற்
பண்டமாநதேறிநடததிறற்புகழைப பரித்தனர்நின்னடிபரிததா (ல
ரண்டர்சூழ்சிமமாசனத்திலவீற்றிருபபதழகுனகென்பதென்வியப்பே
வண்டாபாண்மிழற்றுஞ்சோலைசூழ்தருமைவாழ்சிவஞானதேசிகனே.

கலவிடையொருவன்மோதிடுசமயங கரங்கொடுதாங்கிநின்றென்றும்
புலவிடவருளைச்செய்தனைமுன்னமபொருவிலாககொடியனுமென்னை
விலவிடுகற்போனமோதிடுந்துயரைவிலக்கியாணடருளுதலவேணடும்
வலலவாபதிகளுசொலவிடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே, (அஉ)

கச்சியிற்குமரன்முதலெடுத்தளிததுக் கவிதனையேற்றகமகிழ்ந்து
மெச்சியநூலைநினடியவற்கு விளக்கிப்பினசுருக்கிடமகிழ்ந்து
னிச்சையிலருளைபபுரிந்தனையவ்வா றினறியேயமையுமென்கவியை
வைசசுளமகிழுமபியேறறருடருமை வாழ்சிவஞானதேசிகனே.(அங)

கடியநற்கோடைக்காலத்தின்மடத்துட் கரைத்துளசாணீர்தெளி
படியினிலருந்திவந்தசிரடியார பணிசெயுமபேரிளமபெண்ணைச்(வைப்
சடிதியினீககினைத்தொழக்காமந தாகத்திற்றணிந்திடாதென்று
மடிவிலசீரோடுநதெரிததனை தருமை வாழ்சிவஞானதேசிகனே(அச)

அரியநின்மனையெனற்றிந்தவர்சொலுமுன்னகக்கனலறிந்துசெய்திலைஷ
புரியவாவீபங்கெடவவளாங்கே பொருந்தியவிருத்தையாச்செய்து
பிரியமோடாண்டனைக்கெனையாளல்பெருமபரமென்கொல்பேசிடினே
வரியமாசோலைசெறிந்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (அரு)

ஏர்திகழ்பலவாமுடிக்களும்பொலிய வெழுந்தொளிர்சந்திரன்போல
கார்திகழ்முகிலவர்குழுவினிஞைபபண் ணுவலாதுதிககவிறறிருப்பாய்
சீர்திகழமிவின்முதனமைபனென்று செப்புதரகுனையலாலெவமோ
வார்திகழ்குளங்கணிலுறந்திடுநதருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

செமபொருளிலலாதவர்களுமரிய செநதமிழ்கற்றிலாதவரு
நமபுவியதனிலிலையெனச்செய்தாய் நண்ணிமிக்குறுதுயரதனை (ய்
யிமபரிற்செய்யுமவறுமைபுன்மடமையெங்கொளித்துளவஃதுரைப்பா
வமபமர்முலையாசூழநதிடுநதருமை வாழ்சிவஞானதேசிகனே. (அஎ)

ஆலவாயதனினின்மொழிகொளாத வன்பனைமடுவில்விட்டினமினை
கோலமார்கரையிலேறவியாண்டனைமுன குறைவிலாப்பாசமாஙகடலி
சீலமோடழுந்துமெனைக்கரையேறச்செய்தலுஙகூடுமென்றடைநத
மாலவாவறிவாசூழபெருநதருமை வாழ்சிவஞானதேசிகனே. (அஅ

வாதவூரடிகளையகிழநதிடககூடை மண்ணெடுத்துழன்றுநீரவையை
கேதமேயுறறம்பாலையுனுங கேட்டிடவடைத்தனைமுனனம
பேதமாரடியேனமனததுறுஙகாமப பெருக்கினைபபூதியாலடைத்து
மாதவனுகடபுரிபெருநதருமை வாழ்சிவஞானதேசிகனே. (அகூ)

சுருதிற்பொருளையசட்டையிற்கேட்ட தோடத்தாலவலைச்சியராகக்
கருதிப்பினசென்றுமணநதனைமுநநாள் கருதுமச்சுருதிற்பொருளை
விருதினிற்கேட்டுபபயிலவுமுன்றுள்விழைநதுளேனுரைத்திடவேணடு
மருதினிற்கிள்ளைசோபொழிற்றருமை வாழ்சிவஞானதேசிகனே. (

பாவலற்கரசனிடத்தெழுகுற்றம பாறிடவடமதுரைக்கட்
காவலனுகித்தீரததனைமுன்னங் கருதருமபெருவிருபபங்கொண்
டாவலினுற்செந்தமிழபுனையென்னை யணிபெறச்செய்துளமகிழவாய்
வாவலிற்கலைசோபொழிற்பெருநதருமை வாழ்சிவஞானதேசிகனே.()

அடிதனைபெறறுவாசகங்கொண்ட வம்பலவாணனென்றுரைப்பார்
படிமிசையுன்னையடிபடாதென்றும் பார்வையான்மும்மலச்சுமையைத்
தடிந்திடச்செய்யுந்தரமுடைப்பரமா சாரியராயினைதெரிந்தேன்
வடிவினிற்பொலிவார்பணிபெருந்தருமை வாழ்சிவஞானதேசிகனே()

முன்னமோவசையுமபின்னமோதுதியு மொழிந்திடுமடியர்பாணியு
மென்னவோமுததிவழங்கினைமுந்நா ளென்பராலொருவகையாகப்
பின்னமேயில்லாவன்பினையுடையேன் பேணுநல்லருள்புரிந்திடுவாய்
வன்னமேகலையார்நடஞ்செயுநதருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

ருங்குவளையைமுன்னடியினில்வைத்த காக்ஷியைமறைத்திவண்டங்கி
பருங்குலவளையாக்தோளினிற்செங்கு வளைதனையேற்றனையதனற
ருங்குலபாதத்திதயதாமரையைச் சாததினனுண்டருள்புரிவாய்
ருங்குழைக்தருவும்பணிசெயுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

ரிபகடம்பலணந்தனின்முனமா பாதகந்தீர்த்தனையென்று
ரியபெரியோருரைப்பதைவளருந தீவினையதிவினையிலலா
ரியனுருமெனைத்தடுத்தாண்ட பொறையினுலுணமையென்றறிந்தனை
வாகியல முலைமார்சூழ்பெருந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

ண்ணகுடிகொண்டதேய்மதியதனை விரும்பியேசேகரத்தேற்க
விணங்கினைநீமுன்னென்றுரை சருவ ரிதையமாதினனடியடுகெருந
ணங்கிளரெனதுவளர்மதியதனைக குனைகழலணிவதுகுறைவோ
குவளொழுந்துதுதித்திடுந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. ()

முந்தயவினைசேருடல்பொருளாவி மூன்றையுமன்பினிற்கொண்டு
விந்தையவொன்றுமுத்தியைக்கொடுக்க விரும்பிவீற்றிருந்தனையென்பார
நதியிலவ்வர்த்தகத்திடைலாபம போதுமோவுரைததிடவேணடும
மநதியுமறியாமரஞ்செறிதருமை வாழ்சிவஞானதேசிகனே. (கூ௦)

வெய்யவனொளியையவபவமுதலாம் விழியினுனேக்குதலபோல
வையமுன்மூன்றுமவிலகிடவயிநதோ ராயினுநின்மொழியொது
துய்யவான்பதவியடைந்திடலாமோ சொலுமதுகானறிந்தடைந்தேன
மெய்யளாமதிலிற்சித்திரத்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (கூஅ)

னைறரிசனத்தைநாடியேநடக்கி னீங்கிடாக்கருமலநடக்கு
மனறுபசரித்துத்தொழுதருகிருக்கி லாசையுமிருந்திடுங்கலநது
துனறியவிடையைப்பெற்றிடின்மூன்றுஞ் சொல்லுமெனனிடமவிடைபெறு
வன்றிறலாளர்சூழ்பெருந்தருமை வாழ்சிவஞானதேசிகனே. (மால

சொல்விடுங்கயிலைநந்தியந்தேவர் தூயநன்மரபுமேவாழ்க
செல்வினிற்மிகழுமுழக்கமும்வாழ்க திகழுநின்சந்நிதிவாழ்க
வில்விடுகின்றனடியரும்வாழ்க விசித்திரக்கவிவலோர்வாழ்க
வல்லநின்னன்சீர்வாழ்கவான்றருமை வாழ்சிவஞானதேசிகனே. (க௦௦)

திருச்சிற்றம்பலம்.

சிவஞானதேசிகர்மாலை முற்றிற்று.



உ

குமரன் றுணை

மகா-ள-ள-ஸ்ரீ

தமிழ்ச்சக்கரவர்த்தியாகிய

பழனி

# ஸ்ரீ-மாம்பழக்கவிச்சிங்க

நாவலரவர்களியற்றிய

# பழனாபுரிமாலை

இஃது

பழனிமாநகரம்

தேவஸ்தானம்

கமிட்டிமெம்பர் மகா-ள-ள-ஸ்ரீ

அருணாசலத்தேவரவர்கள்

குமாரர்

கருப்பத்தேவர்

அவர்களால்

கணிதசோதிடம்

ஸ்ரீ-கந்தசாமிபிள்ளையினது

பாரதிவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

பழனி

1879-௵ பெப்பிரவரி-மீ



# புத்தக

# விளம்பரம்

இதனலெமதன்பர்கள்யாவருக்குமறிவிக்கிறதியாதெனில் பழனி மகா-௱-௱-ஸ்ரீ மு-மாம்பழக்கவிசிங்கநாவலரவர்களாலியற்றியச சிட்டபிரபந்தங்களாவன

சுப்ரமண்யர்பேரில்- பழனிபுரிமாலை, பழனிப்பதிகம் - ஆனந்தகீதரசம் இன்பரசம்நாற்பதும்பாலசுந்தரஸ்வாமிகள்பாடியசிவகிரிப்பதிற்றுப்பத்தந்தாதி இவிபசிடும் பிரபந்தங்களாவன மகா-௱.௱-ஸ்ரீ மேற்காட்டிய நாவலரவர்களியற்றிய பழனிநான்மணிமாலைபழனிவெண்பாசிவகிரியமகவந்தாதி-திருச்செந்திற்பதிகம்-கீதாசாமிர்தம் இப்புத்தகம் வேண்டுபவர்கள் பழனி ஜோதிடம் கந்தசாமிபிள்ளையினது பாரதிவிலாச அச்சுக்கூடத்திற்சகாயமானவிலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.

உ

குமரன் றுணை

# பழநிபுரிமாலை





## விநாயகர் துதி

கட்டளைக்கலித்துறை

கடலுண்டகார்திரு மால்வடத்தேதுயில் காசியின்மீ
தடாநின்றவார்பொழில் சூழ்பழநிபுரி யாண்டவற்குத்
தொடரன்பினோடமிழ் மாலைபுனையத் துணைவருவ
திடகும்பசோபித வைங்கரகுஞ்சர செஞ்சரணே. (௧)

## நூல்

கிரிபோலும்வாகுமுந் நாலுங்கை வேலுங்கிரீடமும்பொற்
புரிநூலுமாரமுஞ் சண்முகமும்புனை பூங்கடம்பும்
பரிமாமயூரமுஞ் சேவலுந்தோன்றவென் பாலணுகி
யரிதானசேவைதந் தாள்பழநிபுரி யாண்டவனே. (௨)

பரிபுரமோலிடு நின்றிருசீதள பாதமலர்க்
தெரிசனமேழை யடியேன்பெறவருள் செயவதென்றோ
விரிதிரைவாரியி னூடேயனந்தன் மிசைத்துயில்கூ
ரரிமருகாமுருகாபழநிபுரி யாண்டவனே. (௩)

எப்பாவிகளுனைப் பாடினும்பாட்டுக் கிரங்கியவர்
தப்பானவைபொறுத் தாள்வதன்றோ முறைசஞ்சலத்துள்
வெப்பாரனற்புழு வொப்பாகநீயெனை விட்டுளதே
னப்பாமனம்வெறுப் பாபழநிபுரி யாண்டவனே. (௪)

சாலோகவின்ப முதற்பதநான்கு தரற்குரிய
நீலோகபண்டித னென்றுனிறகென்பிணி நீக்கரிதோ
மாலோனயன்புகழ் வேலோய்தரள மணிவளைசா
லாலோலமென்புனல் சூழ்பழநிபுரி யாண்டவனே. (௫)

ஈராறுகண்பெற் றிருந்துமவற்றொன் றிலேனுமெனைப்
பாராமலேநிற் றவன்கண்மைசாதிப் பதுபடித்தாய
நேராகுமோவிது தீனதயாநிதி நீயெனப்பின்
னார்கிலுஞ்சொல்வ ரோபழநிபுரி யாண்டவனே, (௬)

பாவக்கலியுக காலத்தினும்பற் பலமகிமை
மேவக்கருணை மிகுதெய்வநீயன்றி வேறுளதோ
காவச்சமுமுட் கவலையுந்தீர்த்தெனைக் கானவள்ளி
யாவற்கிசைதுணை வாபழனிபுரி யாண்டவனே. (௭

எத்தனைவிந்தைக ளோவடியார்பொருட் டேவிளைத்து
முத்தலமுந்தொழ நின்றோய்க்கென்னெண்ண முடிப்பரிதோ
சித்தமிரங்கி யருள்செஞ்சடைக்கேள்வெண் டிங்களபுனை
யத்தர்தரும்புதல வாபழனிபுரி யாண்டவனே. (௮

இன்னம்பராமுக மாயிருந்தாலதி லெப்பயனோ
சின்னம்பலவு நினைக்கவெனக்கல்லத் திருக்கோதிப்பாய்
பொன்னம்புயந் தனினுஞ்சத நாத்தினும் பிரமகியபா
லன்னம்புகழ்விளக் கும்பழனிபுரி யாண்டவனே. (௯

காரணகாரியமாகி யெங்கெங்குங் கலந்தபரி
பூரணனீயெற் கயலானதென்ன புதுமையந்தோ
சீரணவாவெளியென் புன்மனத்தைத் தெளிதசருள்வா
யாரணவோசைமி கும்பழனிபுரி யாண்டவனே. (௰

சற்றுகிலுமித் தமியேனுனது தயாவுவரப்
பெறறுலெனைவயின் பெறுதனவெண்ணம் பிறள்வதுண்டோ
முற்றுமுலையுமை பாலாதவத்தின் முயன்றுவினை
யற்றாபெருந்துணை யாம்பழனிபுரி யாண்டவனே. (௰௧

உன்னையலான்மற் றொருபெருந்தெய்வ முணர்ந்திலன்யா
னென்னைவிடேலுனக் காளாகிக்கொள்வது மென்னதடை
முன்னைவிரோத முளதோபொறைநின் முறைசிறியேற்
கன்னைபிதாகுரு நீபழனிபுரி யாண்டவனே. (௰௨

நினைத்துணையேனுநின் சித்தமென்பக்கந் திரும்பிவிட்டால்
வினைத்துயர்தீர்வ தரிதோபனிவெவ வெயிலினுண்டோ
நினைத்தவரந்தமி யேற்கருள்செய்துமுன் னின்றிரட்சி
யனைத்துலகும்பணி யும்பழனிபுரி யாண்டவனே. (௰௩

ஜெனனந்தொறுந்தெரிந் துந்தெரியாமலுஞ் செய்துவந்த
மனவஞ்சனைமுதற் பாவமனேக வகையெனினுங்
கனலொன்றியபஞ் செனவவைதீர்த்தெனைக் காத்தருள்வா
யனாஞ்சிதன்பா வும்பழனிபுரி யாண்டவனே. (௰௪

கொடியேன்விவேகிகள் கூட்டம்புகேனன்பு கூர்ந்தருகிற்
படியேன்வணக்கமொன் றில்லேன்புலன்மேலெண்ணம் பாலுழன்ற
மடியேன்முழுவஞ்ச சகிநாடனெனினும் வழிவழியே
னடியேனெனைக்கைவி டேல்பழனிபுரி யாண்டவனே. (௰௫)

போற்றுகிலேன்பத்தி பூணுகிலேன்நின் புகழ்பலகாற்
சாற்றுகிலேனெழுத் தாறுந்தெரிந்துச் சரித்துவினை
மாற்றுகிலேன்புன் மயக்கால்விளைந்த மனக்கவலை
யாற்றுகிலேனென்னை யாள்பழனிபுரி யாண்டவனே. (௰௬)

எஞ்சலொன்றின்றி யெழுக்கவெங்காற்றி னிடையிலவம
பஞ்சலைந்தென்னப் பகலுமிரவும் பலவினையா
சஞ்சலந்தாக்கத் தவித்தேனையீயத் தகுதியுறா
யஞ்சலென்றுதரிப் பாய்பழனிபுரி யாண்டவனே. (௰௭)

நாட்கொளநாட்கொள நல்லறிவின்றி நடைபிசகி
வாட்கொளநீண்டகண் ணாவலைப்பட்டு மனந்துணைந்து
தாட்கொளவுந்தெரி யாதுழல்வேனைத் தருணமிதி
லாட்கொளல்வேண்டுமை யாபழனிபுரி யாண்டவனே. (௰௮)

எல்லாச்சுருதிபு கின்னியல்பன்னி யிளைக்குமொனிற்
கல்லாச்சிறிய ரினுஞ்சிறியேனென்ன கொடுமையிபோன்
பொல்லாத்துதியை புனைகொள்வா பனகுருப் புவியிலுன்னை
யல்லாற்புகலிலைக் காண்பழனிபுரி யாண்டவனே. (௰௯)

என்றவளுமைக் குழந்தைகுழறினு மின்புறுதல்
போன்றடியேன்வெற றுரைக்குமகருணை புரிந்தருளாய்
தேன்றரு சோலைத் தமிழ்ப்பொதியாசலச் செல்வன்முத
லான்றவர்சேவிக்க வாழ்பழனிபுரி யாண்டவனே. (௨௰)

பேராசையென்னும் பிசாசுபிடித்துப் பிறப்பிறப்பொன்
றோராமலுன்னடி யேன்பேதுறுவ துனக்கழகோ
சீராகவென்னைத் திருத்திக்கருணை செயவருவா
யாராதவின்னமு தேபழனிபுரி யாண்டவனே. (௨௧

துயில்வதுமுண்பதும் வீணாள்செலப்புன் றொழில்வழியிற்
பயில்வதுமன்றிமற றொன்றறியேனென் பயந்தவிர்ப்பாய்
வெயில்விரியும்பொற் கிரீடவிண்ணோர்சிறை மீட்டவெற்றி
மயில்வளர்செங்கைக் குகாபழனிபுரி யாண்டவனே. (௨௨

தினந்தொறுஞானிப் படித்துன்பசாகரத் தேத்தளைத்து
மனந்தடுமாறிற் கரைகாண்பதெவ்வகை வாழ்ததுமென்மே
லினகதயவேன்வர வில்லையுனக்கிங் கெனைப்புரப்பா
யனந்தவிநோதத் தமிழ்ப்பழனாபுரி யாண்டவனே. (உங)

உனதருளாலடியேற் கமைகல்வி யுணர்ச்சியனு
தினமுயாவாயபி விர்த்திபெறும்படி செய்யிகமேல்
கனவிதைதாவினர் கட்கதுகாத்தல் கடமைகண்டா
யனகதயாநிதி யேபழனாபுரி யாண்டவனே. (உச)

கல்லையுந்தாழ்த்திய வன்னெஞ்சவஞ்சக் கசடரிடம்
பல்லையும்பாட்டையுங் காட்டும்படிதொடர் பாழ்மிடியுந்
தொல்லையுந்தீர்த்தருள் வாநோபக்தையுஞ் சூரிஙமா
மல்லையும்போககியு ளாய்பழனாபுரி யாண்டவனே. (உரு)

வெவ்வியபாதக னுனென்னினுநினை வேண்டுகின்றே
னெவ்வியநீசெய் யினுநின்பெருமை யெனக்கதிலென்
செவ்வியமாதவர் சிந்தையினன்றிச் சிறியதொழி
லவ்வியர்பாலனு காப்பழனாபுரி யாண்டவனே. (உசா)

கையாலுனைத்தொழச் சென்னியினாலுன் கழல்வணங்க
மெய்யாயடிககடி வாக்காற்றுதிகக விதித்துமன
ையாவியற்கையு நல்கினியென்னை நழுவவிடே
லையாவுனக்கபை யம்பழனாபுரி யாண்டவனே. (உஎ)

தொடைக்கலமங்கைய ராசையைப்போலுட் டுளைக்கவல்ல
படைக்கலமொன்று மிலைப்பின்னுந்துன்பங்கள் பற்பலவுந்
திடைக்கலகம்புரி கின்றனநானெளி யேனினிநின்
னடைக்கலமஞ்சலி டேல்பழனாபுரி யாண்டவனே. (உஅ)

கவிராஜனென்றொரு பேரிட்டிந்நாள்வரைக் கண்ணியமாய்ப்
புவிராஜருஞ்சொல நீவாழ்விததாயது போலமுற்றுந்
தவிராமலென்றனைக் காப்பதுன்பாரந் தகார்மனத்து
எவிராதசெஞ்சுட ரேபழனாபுரி யாண்டவனே. (உகூ)

வன்றுயாக்கடல் வாய்த்துரும்பாயென் மனதலைந்து
கன்றுமிதற்கினி யென்னசெய்வேனெனைக் காத்தருள்வா
யின்றுமுனக்கபை யங்காலனுலெளி யேன்கலங்கு
மன்றுமுனக்கபை யம்பழனாபுரி யாண்டவனே. (௩௰)

ஓதாரணந்தான் றோரெண்ணமுமுடித் துள்ளிருந்தாய்
காதாரவென்புன் கவியையுங்கேட்டுக் கடைக்கணிநின்
பாதாரவிந்த மலதெளியேனையொப்பார்களினிவே
றாதாரமொன்றுள தோபழனாபுரி யாண்டவனே. (௩௧

பொருணாடிநல்ல புவிநாடிமாதர்புன் போகமெனு
மருணாடியல்ல லுழந்தேனிக[illegible] வனையினிநான்
றெருணாடியையநின் சேவடிநாடிச் சிவகிரிசூழந்
தருணாடியுபவதென் றோபழனாபுரி யாண்டவனே. (௩௨

தஞ்சம்பிறிதிலை நாயேற்குநின்மலர்த் தாளையன்றி
வஞ்சமபுரிவது நீதிகொள்மாயை வசத்தலைந்து
நெஞ்சமபகலு மிரவுநொந்தேனெனை நீபுரப்பா
யஞ்சம்பயில்வயல் சூழ்பழனாபுரி யாண்டவனே. ௩௩

கெஞ்சாதவரையுங் கெஞ்சியனேக கிலேசமுற்று
நெஞ்சானதுநொந் திடவசமோநம்பி னேனினைநான்
பஞ்சானனசொற் பனவேழம்போறகடன் பாட்டையுன்னி
யஞ்சாதெனைப்புரப் பாய்பழனாபுரி யாண்டவனே. (௩௪

மடிமைசண்டாள ருறவுவியாதி மனக்கவலை
மிடிமைவெம்பாவ வினைதொடராமல் விலககிமுற்றுங்
குடிமைகுன்றாவருட் செல்வமெய்ககல்வி கொடுத்தெனைநீ
யடிமைகொண்டாதரிப் பாயபழனாபுரி யாண்டவனே. (௩௫

வாயிற்பிறர்மதிக் கப்பேசுவேன்சில வார்த்தையவை
யோயிற்பழைய படியேமயங்குமென் னுள்ளமந்தோ
தாயிற்கருணை சுரந்தெனையாதரி தாமதிப்பா
யாயிற்கவலைபொ றேன்பழனாபுரி யாண்டவனே. (௩௬

இகபரமென்பதுஞ் சீவேசுரஜெகத் தென்பதும்வாய்ப்
புகலவருஞ்சுகம் போலையமின்றிப் பொருளுணரேன்
சகலவிதங்களுங் காட்டியெனக்குநின் றனருள்வா
யகணிதடம்புறஞ் சூழ்பழனாபுரி யாண்டவனே. (௩௭

தத்துவமுற்றும்விசாரிக் கிலேன்சமர்த் தாற்சிலரை
யெத்துவதற்குநினைத் தேபன்னாள்கழித் தேனிதையப்
பித்துவிகற்பமி திற்றீருமோதவப் பேறருள்செய்
யத்துவிதபொரு ளேபழனாபுரி யாண்டவனே. (௩௮

மூர்த்தினர்பாவமென் வெவவினைதெய்வ முனிவுநல்லோர்
தந்திடுசாபமுதற்றீங் கெலவையிருந தாலுமவை
சிந்திவிசார மெலாநதீர்த்தல்வேண்டுந் திகழ்பொழின்மே
லநதிலாவுல வும்பழனுபுரி யாண்டவனே. (எக

பிறநதவிராசிப் பிழைநவக்கோளின் பிசகுறினும்
பறநதவையோடப் பண்ணிபபதறகென்னநின் பால்வலிமை
சிறநதிலதோவெப படியேனுமென்குறை தீரததருள்வா
யறநதிரியாவறப் புகாபழனுபுரி யாணடவனே. (எஉ

பொறிதளராமற புலனலையாமற் புகல்காண
நெறிபிசகாமற கபமேலிடாமலந் நோநின்றுட்
குறிதவறுமற றெளிநதுயயவென்னைகக்கைக் கொண்டருள்வா
யறிவுடையோர்மொயத்து லாமபழனுபுரி யாண்டவனே. (எங

இவனனையாாநமை யேத்தினெனன்னேததில றொன்னினெனன்னென்
றுவனமயிலாதுள் நீநினைததாலுல குய்வதுண்டோ
கவலையுறுவகை காப்பாயெனைததகி காலமிதா
லவவழியூடுஙி டேல்பழனுபுரியாண்டவனே. (எச

சூலைகிரந்திம கோதரங்குன்மஞ் சுரங்குளிர்கா
மாலைபவுநதிரங குட்டமுதறபிணி மற்றவுநின்
காலைநினைநதவா பாற்சாாவவோவென் கசடொழிப்பா
யாலைம்ருநகுப ருமபழனுபுரி யாண்டவனே. (எரு

கூறியகூறிய கூறினுமேற்றுக் கொடுசிறியேன்
றேறியநீயருள் செயததிடல்வேண்டுந் தியங்கவிடேல்
வீறியவாறிரு தோண்முதல்வாமயல் வென்றுமுனி
வாதியபோதாதொ ழுமபழனுபுரி யாணடவனே. (எசா)

எழுததொடுசொற்பொருள் யாப்பலங்காரமென் றிங்குயர்ந்தோர்
வழுத்துமிலக்கண மெனபுன்கவியில் வழுவினுநீ
முழுத்தயவுற்றினி தாக்கொளல்வேண்டு முனிவருள்ளத்
தழுத்துமலாசசர ஞபழனுபுரி யாண்டவனே. (எஎ)

இழிவானகுற்றமெ லாங்குணமாகக்கொண் டென்னைநல்ல
வழிநீபுகுததிடி னல்லானமற்றெந்த வகையிலுய்வேன்
விழியாலவிருபபொடு பார்த்திடாதீததிடல் வேண்டுமென்று
மழியாதமெயபபொரு ளேபழனுபுரி யாண்டவனே. (எஅ)

நாடுங்குறுமுனி கீரன்பொய்யாமொழி நாவலவ
னீடுங்கருணை யருணகிரிமுத னின்றநல்லோர்
பாடுங்கவிவல னீயென்னினுமென் புன் பாடலுங்கே
ளாடுங்களிமயி லூர்பழனுபுரி யாண்டவனே. (௭௯)

வையந்தனிற்கிர வுஞ்சமெனும்பெரு வஞ்சநெடுஞ்
சையந்தனைத்துக ளாக்கியதந்தார்க்கு முருகமிக
நையந்தரத்தரை முறகாத்தநிறைந்த நாளிலெம்மனுள்
ளையந்தவிர்ப்பரி தோபழனுபுரி யாண்டவனே. (௮௰)

மோனந்தவர்முனி வோரையும்பேதிக்கு மோகமெனி
னூனந்தவாதையெவ் வாறுகடந்துனை நாடியுய்வேன்
றேனந்தவாசனை வீசுநின்பூவடிச் சேவையரு
ளானந்தவாரிதி யேபழனுபுரி யாண்டவனே. (௮௧)

உயராகமப்பொரு ளொன்றறியேன் வினையூடலைக்க
வயராகுதொட்டக லாந்தியென்ன மதிமழுங்கித்
துயராழியிற்சுழல் கின்றேன்கருணை சுரந்துமுன்னின்
றயராதெனைப்புரப் பாய்பழனுபுரி யாண்டவனே. (௮௨)

தாழாதுனுக்கரைப் பாடிக்கொண்டாடித் தரித்திரத்துள்
வீழாதுதுட்டர்சொற் கேளாதுமற்றொரு வெவ்வினையுஞ்
சூழாதுபத்தியிற் சோராதுசென்மத் துயரக்கடலூ
டாழாதெனைப்புரப் பாய்பழனுபுரி யாண்டவனே. (௮௩)

பணிகின்றிலேன் றுதித்தர்ச்சித்துனைச்சிவ பத்திவழி
துணிகின்றிலேன் புலைக்காமாதிமூன்றுந் துறந்துபவந்
தணிகின்றிலேன்றமிழ்த் தாமமறவாதுநின் றுண்மிசைசார்
ணணிகின்றிலேன்பொறுப் பாய்பழனுபுரி யாண்டவனே. (௮௪)

நனவினிகழ்ந்தன வல்லாவிகற்ப நடைபலவுங்
கனவினெழுந்து மயக்கினவேயிக் கலக்கமுள்ள
மனந்திருந்துவ தென்றோவிரைந்து வரந்தருவா
யனவரதந்துதி சேர்பழனுபுரி யாண்டவனே. (௮௫)

ஓடினநாள்பல வோட்டைப்பழங்குடத் துட்புனலாய்க்
கூடினமேனரை கூற்றினுதைபக் குழியெனப்பின்
னீடினவாசைகி லேசங்காணமு நெஞ்சமுங்கூத்
தாடினநீயெனை யாள்பழனுபுரி யாண்டவனே. ௬

தேகமுந்தேகியும் வெவ்வேறென்பாரொன்றுந் தேறுகிலேன்
மோகமுஞ்சோகமுந் தீதெனதெண்ணகதை முற்றுவிப்பாய்
மேகமுமபூகமும் போலுங்குழற்பொன் மிடற்றுவள்ளி
யாகமும்பாகமுஞ் சோபழநுபுரி யாண்டவனே. (௮௭)

கலைபலசொற்பல வெண்ணம்பலமயக் கம்பலவீண்
புலைபலவிச்சை முயற்சிபலமனப புண்பலவென
னிலைபலவெப்படி நான்றோநதுயவே னருணீய்பஙக
ஈலைபலவொத்திசைக் குமபழநுபுரி யாணடவனே. (௮௮)

மாயாவிகற்ப மிதுசச்சிதானந்த வாழவிதென்று
தீயாதரிக்குமிந் நாயேறகுணாதசிட னோவருவா
யோயாமனபபெருமம பேயபிடிததாட்ட வுயாவிழிவொன்
றுபாதிளைத்துநொாந தேன்பழநுபுரி யாணடவனே. (௮௯)

ஏனறிவின்றி யியற்றினேபாவங்க ளென்றெனைநீ
தானவிகின்ற திதுவேலுனது தயைக்கழகோ
நானதுகண்டு நடந்தினியுயவகெந் நாளினமயோ
யான்வர்வந்துதொழுமபழநுபுரி யாண்டவனே. (௯0)

சோபத்தையும்பவத் துன்பத்தையும்கெட்ட துட்டமனத்
தாபததையும்பகைக காலப்பிசகையுஞ் சண்டகமன்
கோபத்தையுமபிணிக் கோரத்தையுமென் குறையையுமெல்
வாபத்தையுந்தவிர்ப் பாயபழநுபுரி யாண்டவனே. (௯௧)

மத்தத்தைவென் றிருக்கின்றவர்போற்றுன் மலர்ப்பதத்தென்
சித்தத்தையன்பிற் செலுத்துமபடிக்குத் திருததியினி
யெத்தத்தையுந்தவிர்த் தீடேற்றல்வேண்டு மிசைகுயிலோ
டத்தத்தையுமபடிக் கும்பழநுபுரி யாண்டவனே. (௯௨)

சராசரஜீவ தயாநிதிநீயிச் சமையமென்முன்
வாராவிடில்யானினி யாரைநினைத்து வரமபெறுவேன்
சூராவடிவேலகு பூங்கைதக்குமர குருமணிச்சூட்
டோரணிமால்பா வுமபழநுபுரி யாண்டவனே (௯௩)

இருவினையின்பயன் பின்னுமெனவுமிலையுடனே
வருமெனவும்பொய் வழககீதெனவும் வருக்குமுல
கொருவிதமன்றெது வுண்மையுதனை யுணாததியெற்குன்
[illegible] (௯௪)

மூனந்தவசீலா மொழிதீர்த்தயாத்திரை மூர்த்திதரி
சனந்தலவாச மிவைமேவறனுட்டிக் கச்சத்தியுண்டோ
தினந்தம்பேனுனையே நம்பினேன்வினை தீர்புகழ்தற்
கனந்தனுமேமயங் கும்பழனுபுரி யாண்டவனே. (௯௫)

பெருவெளியோரணு வாகவணுவும் பெருவெளியாய்
மருவவனேக விநோதமிவ்வாறு வழங்கிவாக்
கருந்தூநீசெய லாமென்கவலை களைந்திடுவ
தருமைகொலோபுக லாய்பழனுபுரி யாண்டவனே. (௯௬)

பூவாழ்சுபாவ நரேசருங்குற்றம் பொறுத்தருளி
மேவாவனேகர் களைத்தெண்டியாமல் விலக்குகின்றார்
தேவாதிதேவ சிகாமணிநீயடருஞ் செய்வதென்சொ
லாவாவிநோதரு மம்பழனுபுரி யாண்டவனே. (௯௭)

நீதிந்துறையறி யேனெனினுஞ்சில நின்பெயரை
யோதித்துதிப்புரி கின்றேன்வருத்த மொழித்தருள்வாய்
சோதிக்கிடனினை யாதேபொறுதுளந் தூய்மதியோ
டாதித்தனும்வலஞ் சூழ்பழனுபுரி யாண்டவனே. (௯௮)

பார்க்குமளியிசை பாடியபூங்கற் பகவிமையோ
ரூர்க்குமுடைக ருலகினுக்குமபண் டுளநடுக்கந்
தீர்க்குமுயர்வுடை நீதமியேனைவஞ் சிக்கிலினி
யார்க்குமுறையிடு வேன்பழனுபுரி யாண்டவனே. (௯௯)

வணங்குவ துங்கைகு விப்பதும்வாழ்த்துவ துந்தொழும்புக்
கிணங்குவதுந்தெரி கின்றிலபாவியென் றென்னைவெறு
த்துணங்குதலின்றியின் றுய்யும்படிக்கரு ளோங்குகங்கை
யணங்குமுவந்தமைந் தாபழனுபுரி யாண்டவனே. (௱)

பாடியபண்பெப் படியிருந்தாலுமென் பாமலர்த்தார்
சூடிவரம்பற்பல வுந்தந்துள்ளத் துயர்தவிர்ப்பாய்
வாடிமயங்கச்செ யேல்வரைதோறு மகிழ்ந்துவிளை
யாடிவருஞ்சிற்ப ராபழனுபுரி யாண்டவனே. (௱௧)

கார்வாழிவாழி சராசரம்வாழி கருதுபொருள்
சீர்வாழிவாழி சைவந்தமிழ்வாழி செழுங்கடப்பந்
தார்வாழிவாழி மயில்வாழிவேல்புடை தங்குநங்கை
மார்வாழி வாழ்பழனுபுரி யாண்டவன்வாழியவே. (௱௨)

(பழனுபுரிமாலை முற்றும்)

# திருவேங்கடமாலை

'திரு' என்னும் பலபொருளொருசொல் வடமொழியிலே 'ஸ்ரீ' என்பதுபோலத் தமிழிலே தேவர்கள் அடியார்கள் ஞானநூல்கள் மந்திரங்கள் புண்ணியஸ்தலங்கள் புண்ணியதீர்த்தங்கள் முதலிய மேன்மையையுடைய பலபொருள்களுக்கும் விசேஷணபதமாகி, அவ்வற்றின்முன்னே மகிமைப் பொருளைக் காட்டி வரும்; ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீபக்திசாரர் ஸ்ரீராமாயணம் ஸ்ரீஅஷ்டாக்ஷரம் ஸ்ரீரங்கம் ஸ்ரீகைரவிணி ஸ்ரீபாதம் எனவும், திருமால் திருமழிசைப்பிரான் திருவாய்மொழி திருவெட்டெழுத்து திருவரங்கம் திருவல்லிக்கேணி திருவடி எனவும் வழங்குமாற்றால் அறிக. இனி இதனை, ஸ்ரீஎன்பதன் சிதைவென்பாரும் உளர். இது, வேங்கடத்துக்கு அடைமொழி; மாலைக்கு அடைமொழியாகவுமாம்.

வேங்கடம் என்பது - திருமாலினது திவ்யதேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகின்ற மூன்று ஸ்தலங்களுள் இடையதுமாகிய தலம். தன்னை அடைந்தவர்களது பாவமனைத்தையும் ஒழிப்பதனால், 'வேங்கடம்' எனப் பெயர் பெற்றது; வடசொல். வேம் - பாவம், கடம் - எரித்தல் எனப் பொருள் காண்க. இதனை, "அத்திருமலைக்குச் சீரார் வேங்கடாசலமெனும் பேர், வைத்தனரதுவே தென்னில் வேமென வழங்கெழுத்தே, கொத்துறு பவத்தைக் கூறுங் கடவெனக் கூறிரண்டாஞ், சுத்தவக்கரங் கொளுத்தப்படு மெனச் சொல்வர் மேலோர்", "வெங்கொடும்பவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல், மங்கலம் பொருந்துஞ் சீர் வேங்கடமலை யானதென்று" என்னும் புராணச்செய்யுட்களாலும் அறிக. ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தநபுரமென்னும் ஊரில் புரந்தரனென்னும் பிராமணோத்தமனது குமாரனாகிய மாதவனென்பவன் தன்மனைவியாகிய சந்திரரேகையென்பவளோடு பூஞ்சோலையிற் சென்று விளையாடிக்கொண்டிருக்கையில் மாலிநியென்பாளொரு சண்டாள கன்னிகையின் கட்டழகைக் கண்டு காமுற்று அவளைக் கூடி மனையாளைத் துறந்து அப்புலைமங்கையுடனே சென்று புலால் நுகர்ந்தும் கட்குடித்தும் கைப்பொருள் முழுவதையும் இழந்து பின்பு வழிபறித்தல் உயிர்க்கொலை முதலிய கொடுந்தொழில் புரிந்து பொருள்சேர்த்து அவளுக்குக்கொடுத்துவந்து முடிவில் வறியவனாகிப் பலவகைநோய்களையும் அடைந்து அவளால் அகற்றப்பட்டவனாய்ப் பல பாவமுந் தொடரப் பித்தன்போல அலைந்து திரிந்து இத்திருமலையை அடைந்த மாத்திரத்தில் தனது தீவினையெல்லாம் சாம்பலாகப்பெற்று முன்னைய பிரமதேஜஸைப் பொருந்தி நல்லறிவுகொண்டு திருமாலைச் சேவித்து வழிபட்டுப் பரமபதமடைந்ததனால் இதற்கு 'வேங்கடாசலம்' என்று பெயர் நிகழ்ந்ததென்று வடமொழியிலே ப்ரஹ்மாண்ட புராணத்திலும், பவிஷ்யோத்தரபுராணத்

னும் கூறப்படுதல் காண்க. அன்றி, 'வேம் என்பது - அழிவின்மை, கம் என்பது - ஐசுவரியம். அழிவில்லாத ஐசுவரியங்களைத் (தன்னையடைந்தார்க்குத்) தருதலால், வேங்கடமெனப் பெயர் கொண்டது' என்று வராகபுராணத்திற் சொல்லப்பட்டவாறும் உணர்க. இனி, தமிழ்மொழியாகவே கொண்டால், வெவ்விய காடுகளை யுடைய தெனப் பொருள்படு மென்க.

திரு என்பதற்கு - மேன்மையான என்று பொருள்கொண்டால் திரு வேங்கடம் என்ற தொடர் - பண்புத்தொகையும், மேன்மையையுடைய என்று பொருள்கொண்டால் இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன் தொக்க தொகையுமாம். வேங்கடமாலை என்ற தொடர் - வேங்கடத்தினது சம்பந்தமான மாலை யென்று விரித்து வேங்கடத்தின்விஷயமான பிரபந்த மென்று பொருள்கொண்டு ஆறும்வேற்றுமைத் தொகையாகவும், வேங்கடத்தைப்பற்றிய மாலையென்று விரித்துப் பொருள்கொண்டு இரண்டாம் வேற்றுமைஉருபும் பொருளும்தொக்க தொகையாகவும் உரைக்கத்தக்கது. மாலா என்ற வடமொழி, மாலையென விகாரப்பட்டது; "ஆவீறு ஐயும்" மலர்கள் கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோலச் சொற்கள்கொண்டு தொடுக்கப் பட்ட பாமாலையாகிய பிரபந்த மென்க; எனவே, மாலையென்பது - உவமை யாகுபெயராம். மாலையென்பது - பலவகைப்பிரபந்தங்களுள் ஒன்று. அதன் இலக்கணம் - ஒருவிஷயத்தைக்குறித்துப் பலசெய்யுள் கூறுவது. ஸ்ரீநிவாஸ னென்று வடமொழியிலும், அலர்மேல்மங்கையுறைமார்ப னென்று தென் மொழியிலும் திருநாமங்கூறப்படுகின்ற திருவேங்கடமுடையானது திருவடி களிலே சூட்டும் திருமாலை போலுதலால், திருவேங்கடமாலை எனப்பட்டது; "அடிசூட்டலாகு மந்தாமம்," 'செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை", "கற்றினம் மேய்த்த கழலிணைக்கீ, ழுற்ற திருமாலை பாடுஞ் சீர்" என்றார் பெரியாரும். இங்கு வேங்கடமென்பது - அத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானையும் குறிக்கும்; உபலக்ஷணம். 'தேசிய ரான பெருமானைச் சொன்னதெல்லாம் உபஸர்ஜநகோடியிலே யாய் அத் தேசமே யாய்த்து, இத்திருமாலைக்கு விஷயம்.'

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தேதானும் புதுவது கிளந்த யாப்பின்மேற்றே" என்பதனால், 'விருந்துதானும், பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றால்தொடுக்கப்படும் தொடர்நிலை மேலது' என்றுகூறினமையின், இம்மாலை அங்ஙனம்கூறிய விருந்தாமென்று உணர்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார்.

நூலின் புறமாக முதலிற் கூறப்பட்ட காப்புச்செய்யுள் இரண்டும் அவையடக்கச் செய்யுள் ஒன்றும், நூலின் இறுதியிற் கூறப்பட்ட "ஆதிதிரு வேங்கடமென் றாயிரம்பேரா ளிடமென், றோதிய வெண்பா வொருநூறுங் கோதில், குணவாளபட்ட ரிருகோகனகத்தாள் சேர், மணவாள தாசனுறன் வாக்கு" என்ற சிறப்புப்பாயிரச்செய்யுளொன்றும் நீங்கலாக நூ

க்னெல்லாம் - முன்னிரண்டடியில் திருவேங்கடத்தின் சிறப்பையும், பின்னிரண்டடியில் திருவேங்கடமுடையானது சிறப்பையுங்கூறி 'ஊர்' என்னுந் துறை யமைய 'திருவேங்கடமென்பது திருமாலின் திருப்பதி' என்னும் வாய்பாடு பொருந்த இயற்றப்பட்டுள்ளன. இந்நூலின் பிற்பாதியாகிய ஐம்பது செய்யுள்களின் முன்னிரண்டடிகள் - இத்தன்மையோடு சிலேடையென்னும் அலங்காரமு முடையன. இந்நூற் செய்யுள்க ளெல்லாவற்றிலும் பின்னிரண்டடிகள் - பெரும்பாலும் திரிபு என்னுஞ் சொல்லணியும், சிறுபான்மை யமகம் என்னுஞ் சொல்லணியும், அமையக் கூறப்பட்டுள்ளன.

## காப்பு.

காப்பு - காத்தல். அது, இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்தைக் குறிக்கும். ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர் கடவுளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து. இக்காப்புச் செய்யுள், ஆழ்வார்கள் பன்னிருவருட் பிரதானரான நம்மாழ்வாரைப் பற்றியது. ஸ்ரீவைஷ்ணவ சமயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இக்காப்புச்செய்யுள், விஷ்ணு பக்தர்களிற் சிறந்த ஆழ்வாரைக் குறித்த தாதலால், வழிபடுகடவுள்வணக்கமாம். தம்தமது மதத்துக்கு உரிய கடவுளை வணங்குதலே யன்றி அக்கடவுளின் அடியார்களை வணங்குதலும் வழிபடுகடவுள்வணக்கத்தின் பாற்படுமென அறிக. அவ்வாழ்வாரால் வெளியிடப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களின் சொற் பொருட் கருத்துக்க ளமைய அப்பிரபந்தங்கள்போலச் செய்யப்படுவது இப்பிரபந்த மென்பதுபற்றி, இந்நூலின் இக்காப்புச்செய்யுளை ஏற்புடைக்கடவுள்வணக்கமென்று அறிதிற்கொள்ளவும் அமையும்.

திண்பார் புகழுந் திருவேங் கடமாலை
வெண்பாவா னூறும் விளம்புதற்குக்—கண்பாராய்
நாராய ணாவடியே னாடுந் தமிழ்வேத
பாராய ணாசடகோபா.

(இதன்பொருள்.) நாராயணா-நாராயணனே! அடியேன் நாடும்-உனது அடியவனாகிய என்னால் மிகவும்விரும்பப்படுகிற, தமிழ்வேதபாராயணா-தமிழ் வேதங்களாகிய திவ்வியப்பிரபந்தங்களைக் கூறியருளியவனே! சடகோபா-சடகோப னென்னுந் திருநாமமுடையவனே!——திண் பார் புகழும்-வலிய பூலோகத்திலுள்ளவர்கள் எல்லாராலும் புகழப்படுகின்ற, திருவேங்கடம் - திருவேங்கடமென்னுந் திருப்பதியின் விஷயமான, மாலை - மாலையென்னும் பிரபந்தரூபமாக, நூறும்-நூறுசெய்யுள்களையும், வெண்பாவால் - வெண்பாவென்னும் யாப்பினால், விளம்புதற்கு - (அடியேன்) சொல்லும்படி, கண் பாராய் - கிருபைசெய்தருள்வாய்; (என்றவாறு.)

அடியேன் - அடிமை யென்னும் பண்பி னடியாகப் பிறந்த தன்மையொருமைக் குறிப்பு வினையாலணையும்பெயர். 'அடியேனாடும்' என்றது,

தமிழ்வேதத்துக்கும், தமிழ்வேதபாராயணனுக்கும் அடைமொழியாகத் தக்கது. இந்த அடைமொழியினால், இந்நூலாசிரியர்க்குத் திவ்வியப்பிரபந்தங்களினிடத்திலும் ஆழ்வாரிடத்திலு முள்ள அன்பு விளங்கும்.

திருமாலடியார்களிற் சிறந்த ஆழ்வார்கள் பன்னிருவருள் ஐந்தாமவராகிய நம்மாழ்வார், மற்றையாழ்வார்கள்போல லௌகிகவிஷயஞானம் நடையாடுகையில் எம்பெருமானருளால் ஒருகாலவிசேஷத்தில் தத்துவஞானாதிகள் தோன்றப்பெற்று அந்தப்பகவானை அனுபவிப்ப தன்றி, திருத்துழாய் பரிமளத்துடனே அங்குரிப்பதுபோல இயற்கையிலேயே விலக்ஷணமான ஞானபக்திகளையுடைய ராதலால், மிகுந்த ஏற்றமுள்ளவராய்த் தத்துவ ஞானப்பிரவர்த்தநத்தில் பிரதம ஆசாரிய ராகக் கொள்ளப்படுவர். இவரைப் பகவானுடையஅம்சமென்று பாத்மபுராணம் கூறுகின்றதனால், 'நாராயணா' என்று எம்பெருமான்திருநாமத்தினால் விளித்தார். இவர்க்கு இருப்பிடமான திருப்புளியமரம், எம்பெருமானுக்குத் திருப்பள்ளிமெத்தையான ஆதிசேஷனது அம்சமென்று பிரமாண்டபுராணத்திற்கூறப்பட்டிருக்கிறது.

நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளுள் பாண்டிய நாட்டுத் திருப்பதி பதினெட்டில் ஒன்றும் தாமிரபர்ணிதீரத்திலுள்ளதுமான திருக்குருகூரென்கிற திவ்வியதேசத்திலே காரியென்பவர்க்கு உடையநங்கையாரது திருவயிற்றிலே திருவவதரித்த இவர் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய குழந்தைச்செய்கை யொன்றையுங் கொள்ளாமலே வாட்டமின்றிப் பரிபூர்ணராயிருக்கிற ஆச்சரியத்தைத் தாய்தந்தையர்கண்டு இவரை அத்திருப்பதியிலுள்ள திருமாலின் திருக்கோயிலுள் கொண்டுபோய் விட, இவர் அங்குஇருந்த ஒரு புளியமரத்தின்கீழ்ச் சென்று வீற்றிருந்து பதினாறுபிராயமளவும் கண்திறவாமல் மௌனமாய் எழுந்தருளியிருந்த பின்பு, மதுரகவிகள் இவ்வாழ்வாருடைய மகிமையை அறிந்து வந்து அடைந்து அடிமைத்தொழில் செய்துவருகையில், ஆழ்வார் இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்ற நான்கு வேதங்களின் சாரார்த்தங்கள் முறையே அமையத் திருவிருத்தம் திருவாசிரியம் திருவாய்மொழி பெரியதிருவந்தாதி என்ற நான்கு பிரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை உய்வித்தன ரென்ற வரலாறு அறிக; அத்தன்மைபற்றி, 'தமிழ்வேதபாராயணா' என்று விளித்தார். பாராயணம் - நியமத்தோடு ஓதுதல். ஸம்ஸ்கிருத வேதங்கள் போலவே தமிழ்வேதங்களும் எவராலும் இயற்றப்படாமல் நித்தியமாயுள்ளவை யென்றும், அந்த வடமொழி வேதங்கள் ஆதிகாலத்தில் பிரமனது வாக்கினின்று வெளிப்பட்டமாத்திரத்தைக்கொண்டு "முன்னந் திசைமுகனைத் தான்படைக்க மற்றவனும், முன்னம்படைத்தனன் நான்மறைகள்" என்று அவ்வேதங்களை அவன் படைத்தானென்ன உபசாரமாகச் சொல்வது போலவே, ஆழ்வாருடைய திருவாய்மலரினின்று ஆதியில் இத்தென்மொழி வேதங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தைக்கொண்டு "வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன்" என்று இவ்வேதங்களை இவர் இயற்றியதாகச்

சொல்லுதல் உபசார வழக்கென்றும் சித்தாந்த மென்பது, 'தமிழ்வேத பாராயணு' என்ற சொல்லின் ஆற்றலால் விளங்கும். இனி, பாராயணம் என்ற வடசொல்லுக்கு - முழுவதும் என்று ஒருபொருளுள்ளதனால், தமிழ் வேதங்களெல்லாவற்றையும் வெளியிட்டவரென்றும் பொருள் கொள்ள லாம்; பிற்காலத்தில் அர்ச்சாவிக்கிரகரூபியாயிருந்த இவ்வாழ்வாரை நாத முனிகள் தக்கபடி உபாசிக்க, அவர்க்கு ஆழ்வார் பிரசன்னராய் தமது நான்கு திவ்வியப் பிரபந்தங்களையும் மற்றுமுள்ள ஆழ்வார்கள் அருளிச் செய்த வேதப்பொருளமைந்த திவ்வியப் பிரபந்தங்களெல்லாவற்றையும் சொல்லியருளினரென்கிற வரலாறு காண்க.

கர்ப்பத்தி லிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தை களைப் பிறந்தவுடனே தனது ஸ்பரிசத்தால் அஜ்ஞாநத்துக்குஉள்ளாக்கி அழு தல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சட மென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்தபொழுது இவரையும் தொடு தற்கு வர, அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தால் ஒறுத்து ஓட்டி யொழித்ததனால், சடகோபரென்று இவர்க்கு திருநாமமாயிற்று. மாறன், பராங்குசன். நம்மாழ்வார் முதலிய திருநாமங்களும் இவர்க்கு உண்டு.

நாராயணன், பாராயணன், சடகோபன் என்ற வடமொழிப் பெயர் கள், ஈறுகெட்டு ஈற்றயல் நீண்டு விளியேற்றன. பார - இடவாகுபெயர். பார் என்பது - இங்கு மற்றை யுலகங்களுக்கும் உபலக்ஷணமென்றாவது, பார் என்ற சிறப்புப்பெயர் பொதுப்பட உலகமென்ற மாத்திரமாய் நின்ற தென்றாவது கொள்க; வேங்கடமே, "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு," "உலகுக்கெல்லாம், தேசமாய்த் திகழும் மலைத் திருவேங்கடம்" என்ப வாதலின். 'வெண்பாவானூறும்' என்ற பாடத்துக்கு - வெண்பா வாகிய நூறுகவியையு மென்க. கண்பார்த்தல் - கடாக்ஷித்தருளுதல், ஆய் - ஏவலொருமை வினைமுற்று விகுதி. (க)

இதுவும் அது.

இது, திருவேங்கடமுடையானைக் குறித்தது.

மூலமே யென்றகரி முன்வந் திடர்தொலைத்து
நீலமே கம்போல நின்றானைப்—பாலாய
வேலைநடு விற்றுயிலும் வித்தகனை வேங்கடத்து
மாலையன்றிப் பாடாதென் வாய்.

(இ - ள்.) மூலமே என்ற - ஆதிமூலமே யென்று முறையிட்ட, கரி முன் - கஜேந்திராழ்வானுடைய முன்னிலையிலே, வந்து - எழுந்தருளி, இடர் தொலைத்து - (அதற்கு முதலையினாலுண்டான) துன்பத்தை நீக்கி, நீல மேகம் போல நின்றானை - நீலநிறமுள்ள மேகம் போலக் காட்சிதந்து நின்றருளியவனும், பால் ஆய வேலை நடுவில் துயிலும் வித்தகனை - பால்மய மான கடலின் நடுவில் யோகநித்திரைகொண்டருளுகிற ஞானசொரூபியு

மாகிய, வேங்கடத்து மாலை - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற திருமாலை, அன்றி - அல்லாமல், (வேறொருகடவுளை), என் வாய் பாடாது - எனது வாயானது பாடித்துதியாது; (எ - று.)

ஆசீர்வாதம் நமஸ்காரம் வஸ்துநிர்த்தேசம் என்று வடமொழியிலும், வாழ்த்து வணக்கம் வருபொருளுரைத்தல் என்று தமிழிலுங் கூறப்படுகிற மூன்றுவகை மங்களங்களுள் வருபொருளுரைத்த லென்னும் வஸ்துநிர்த்தேசரூபமான மங்களமாகும், இச்செய்யுள். "தேவு மற்றறியேன்," "வேறொன்றும் நானறியேன்" என்றாற்போல, 'மாலையன்றிப் பாடாதுஎன்வாய்' என்று தமது உறுதியான கொள்கையை வெளியிட்டார்; மறந்தும் புறந்தொழா மாந்தராதலால், பரதேவதை யாகிய நாராயணனை வழிபடுதலே யன்றி க்ஷுத்ரதேவதைகளாகிய பிறதேவதைகளை வழிபடாமை ஸ்ரீவைஷ்ணவர்க்குச் சிறந்தலக்ஷணமென்க. எம்பெருமானைப்பாடுவதே யன்றித் தனிகர்களான மனிதர்களுமுட்பட மற்றெவரையும் பாடாது என்வா யென்பதும் இதன் தேர்ந்தகருத்தாகலாம். "சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ, என்னாவி லின்கவி யானொருவர்க்குங் கொடுக்கிலேன், தென்னா தெனா வென்று வண்டு முரல் திருவேங்கடத்து, என்னானை யென்னப்ப னெம்பெருமா னுளனாகவே" என்று ஆழ்வார் அருளிச்செய்தமை அறிக. ஒருகால் யான் பாடக்கருதினாலும் என்வாய் பாடாது; அது எம்பெருமானையே பாடப்பழகியதும் பிறரைப்பாடப் பழகாததும் ஆதலால் என்னுங் கருத்து அமைய, 'பாடாது என்வாய்' என வாயின்மேல் ஏற்றிக் கூறினார்; இதனை, "பொய்ம்மைமொழி புகன்றறியேம் புகல மனமெண்ணுகினும், மெய்ம்மையலது உரையா நா வேதநவில் பயிற்சியால்" என்ற நைடதத்தோடு ஒப்பிடுக.

நின்றான், வித்தகன், மால் என்ற மூன்றும் - ஒருபொருளின்மேல் வந்த பலபெயர்கள். இவற்றில், முந்தின இரண்டையும் விசேடணமாகவும், பிந்தினதை விசேடியமாகவும் கொள்க. தனக்கு அடிமைப்பட்ட உயிர்களைப் பாதுகாத்தலில் எம்பெருமானுக்கு உள்ள மிக்க ஆதரமும், அந்த எம்பெருமான் எப்பொழுதும் இடைவிடாமல் லோகரக்ஷணசிந்தனை செய்துகொண்டிருத்தலும், அப்பெருமான் அடியார்களுக்கு எளிதில் அருள்செய்தற்பொருட்டுத் திருவேங்கடத்தில் எழுந்தருளியிருத்தலும் தோன்றக் கூறினார்.

கஜேந்திராழ்வான் ஆதிமூலமே யென்று பொதுப்படக் கூப்பிட்டபொழுது எம்பெருமானல்லாத பிறதேவரெல்லோரும் தாம்தாம் அச்சொல்லுக்குப் பொருளல்லரென்று கருதியொழிய, அதற்கு உரிய திருமால் தானேவந்து அருள் செய்தனனென நூல்கள் கூறும். ஒரு விலங்கினாலே மற்றொரு விலங்குக்கு நேர்ந்த துன்பத்தைத் தான் இருந்தவிடத்திலிருந்தே தீர்ப்பது சர்வசக்தனான எம்பெருமானுக்கு மிகவும் எளியதாயினும் அப்பெருமான் அங்ஙனஞ்செய்யாமல் தனதுபேரருளினால்

அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கே வந்து உதவின மகாகுணத்தில் ஈடு பட்டு, அதனை இங்ஙனம் முதலிற் கூறினார். இவ்வரலாற்றில், திருமாலே பரம்பொருளாந்தன்மை வெளியாம்.

'பாலாய வேலை நடுவில் துயிலும் வித்தகன்' என்றது, பரத்வம் வியூ கம் விபவம் அர்ச்சை அந்தர்யாமித்வம் என்ற எம்பெருமானது ஐவகை நிலைகளுள் வியூகநிலையை உணர்த்தும். பாலாயவேலை - திருப்பாற்கடல், ஆய, ய் - இறந்தகால இடைநிலை. (உ)



## அவையடக்கம்.

அவையடக்கமாவது - நற்றோர்சபைமுன் கவி தன்னைப்பற்றித் தாழ்த் திக் கூறுதல். அவை - ஸபா என்ற வடசொல்லின் சிதைவு. அடக்கம்- தொழிற்பெயர்; அடங்கு - பகுதி, அம் - விகுதி, வலித்தல் - விகாரம்.

ஆழ்வார்கள் செந்தமிழை யாதரித்த வேங்கடமென்
றாழ்வான புன்சொல்லுந் தாங்குமா—லேழ்பாரும்
வெல்லுங் கதிர்மணியும் வெம்பரலுஞ் செஞ்சாந்தும்
புல்லும் பொறுத்தமையே போல்.

(இ - ள்.) ஏழ் பாரும் - ஏழு உலகங்களையும், வெல்லும் - (தமக்கு) விலையாகக் கொள்ளும்படியான, கதிர் மணியும் - ஒளியையுடைய இரத் தினங்களையும், வெம் பரலும் - வெவ்விய பருக்கைக்கற்களையும், செம் சாந்தும் - சிவந்த சந்தன மரங்களையும், புல்லும - புற்களையும், பொறுத்த மையே போல் - தான் தரிக்கின்ற தன்மையே போல,—ஆழ்வார்கள் செந் தமிழை ஆதரித்த வேங்கடம் - ஆழ்வார்கள் அருளிச்செய்த செவ்வியதமிழ்ப் பாசுரங்களை அன்புடன் ஏற்றுக்கொண்ட திருவேங்கடமலையானது, என் தாழ்வு ஆன புல் சொல்லும் தாங்கும் - என்னுடைய மிகவும் இழிவாகிய பாடல்களையும் ஏற்றுக்கொள்ளும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றப் பொருளதுமாம்.

மிகச்சிறந்த இரத்தினங்களோடு ஒப்ப மிகவும் இழிவான பருக்கைக் கற்களையும், சிறந்த சந்தனமரங்களோடு ஒப்பச சிறப்பில்லாத புற்களையும் திருவேங்கடமலை தன்மேற் கொள்ளும் இயல்பின தாதலால், அவ்வாறே அம்மலை ஆழ்வார்களுடைய மிகச்சிறந்ததமிழ்ப்பாசுரங்களோடொப்ப எனது மிகத்தாழ்ந்த பாடல்களையும் அங்கீகரிக்கும் என்னுந் துணிவுபற்றி, யான் இப்பிரபந்தம் பாடத்தொடங்கினேன் என்பதாம். உபமான உபமேயங்க ளில் முறைநிரனிறை இருத்தல் காண்க.

பகவானுடைய திவ்ய மங்கள குணங்களாகிய அமுதவெள்ளத்திலே மூழ்கி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவ ராதலால், இவர்களுக்கு, ஆழ்வார் என்று திருநாமம். ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்தமெய்யடியார்க ளென்று கொண்டாடப்படுகின்ற ஆழ்வார்கள் பன்னிருவர்; அவராவார்—

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வ நம்மாழ்வார், (அவரதுசிஷ்யரான) மதுரகவியாழ்வார், குலசேகராழ்வா பெரியாழ்வார், (அவர்வளர்த்த திருமகளாரான) ஆண்டாள், தொண் ரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என இவ இவர்களில் தொண்டரடிப்பொடியாழ்வாரும் மதுரகவியாழ்வாரும் தவ ந்த மற்றைப்பதின்மரும் திருவேங்கடத்தைப் பாடினரென அறிக. 'எ பாரும் வெல்லுங் கதிர்' என்பதற்கு - எல்லாவுலகங்களிலுஞ் சென் பரவி இருளை வென்று அகற்றும் ஒளியையுடைய என்று உரைப்பினு அமையும். எழ்பாரும் வெல்லும் - ஏழுலகங்களிலும் (எல்லாஇரத்தின களினும்) மேம்பட்ட என்றுமாம். தமிழ், சொல்-பாடல்களுக்குக் கருவியா பெயர். தாழ்வான, புல் - ஒருபொருட்பன்மொழி. எழ்பார் - கீழேழு மேலேழும் ஆக ஈரேழுலக மென்க. செந் தமிழ் - சுத்தமான தமிழ்.

---

## நூல்.

க. பொன்னு மணியும் பொலிந்தோங்கிப் பார்மகட்கு
மின்னு மணிமுடியாம் வேங்கடமே—மன்னும்
பரமபத நாட்டினன் பைபரவின் சூட்டிற்
சிரமபத நாட்டினன் சேர்வு.

(இ - ள்.) பொன்னும்—, மணியும் - நவரத்தினங்களும், பொலிந்து (தன்மீது) விளங்கப்பெற்று, ஓங்கி - தான் உயர்ந்திருத்தலால், பார்மகட் மின்னும் மணி முடி ஆம் - பூமிப்பிராட்டிக்கு விளங்குகின்ற இரத்தினகி டம்போலிருக்கிற, வேங்கடம் - திருவேங்கடமலையானது,—மன்னும் - நி பெற்ற, பரமபதம் நாட்டினன் - பரமபதமென்னுந் திருநாட்டை யுடை வனும், பை அரவின் சூட்டில் - படத்தையுடைய (காளியனென்னும்) பாம் னது முடியிலே, சிரம பதம் நாட்டினன் - ஆட்டப்பயிற்சியையுடைய தி வடிகளை நிறுத்தி நடனஞ்செய்தவனு மாகிய எம்பெருமான், சேர்வு - (தி வுள்ளமுவந்து) சேர்ந்திருக்குமிடமாம்; (எ - று.)—ஆம் - உவமவுருபு.

வேங்கடம் சேர்வு எனமுடிக்க; இம்முடிபு, இந்நூற்செய்யுளெல்லாவ றுக்கும் ஒக்கும். ஏ - ஈற்றசை; பிரிநிலையாகக்கொள்ளின், இத்திருப்ப எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மற்றையெல்லாத்திவ்ய தேசங்களினு மிகவும் பாங்கான வாசஸ்தானமென்னுங் கருத்து அமையும்: அங்ஙனம்சிற புடையதாதல், புராணங்களினாலும் விளங்கும். முன்னிரண்டடி-வடிவுபற் வந்த உவமையணி பரமபதம் என்றும் அழிவில்லாது நித்தியமாயிருத லால், அதற்கு, 'மன்னும்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பர பதம்-சிறந்த ஸ்தானம். பரமபத நாடு-பரமபதமாகியநாடு; இருபெயரொட்

வருந்துதலென்னும் பொருளைத் தருகின்ற சுரமம் என்னும் வடசொ

வரு சிரமநிலை காண்மி னெனவே" என்ற வில்லிபுத்தூரார் பாரதச் செய்யுளில் படைக்கலப்பயிற்சி யென்னும் பொருளில் வந்தது போல, இங்கு நடனப்பயிற்சி யென்னும் பொருளில் வந்தது. கண்ணன் காளியனுடைய முடியின்மேல் ஏறி நர்த்தநஞ்செய்தருளும்போது ஐந்து தலைகளையுடைய அந்நாகம் எந்தெந்தப்படத்தைத் தூக்குகின்றதோ அந்தந்தப்படத்தைத்துவைத்து நர்த்தனஞ்செய்து நின்று அப்பாம்பின்வலிமையை யடக்கி அதனை மூர்ச்சையடையச் செய்கையில் பலவகை நடனத்திறங்களைச் செய்து காட்டியமை தோன்ற, 'சிரமபதநாட்டினன்' என்றார்; அத்தன்மையை, 'சுவாமிநர்த்தனமுறைமையில் வட்டமாய்ச்சுற்றுவது முதலானபிராந்திகதிகளினாலும், ஒருபக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்துக்குப் போவது முதலான ரேசககதிகளினாலும், பாதத்தை முன்னீட்டிவைப்பதாகிய தண்டபாதகதியினாலும், அந்தச் சர்ப்பராசன் நசுங்கி மிகுந்த உதிரத்தையுங் கக்கினான்' என்ற விஷ்ணுபுராணவாக்கியத்தால் நன்கு அறிக. "கானகமாமடுவிற் காளிய னுச்சியிலே, தூயநடம்பயிலுஞ் சுந்தர", "காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட் டவ, னீண்முடி யைந்திலு நின்று நடஞ்செய்து, மீள வவனுக் கருள்செய்த வித்தகன்" என்ற ஆழ்வாரருளிச்செயல்களையுங் காண்க. இனி, சிரமபதம் நாட்டினன் என்பதற்கு - வருத்தத்தன்மையை உண்டாக்கியவ னென்றும், சிரமத்தை நீக்குகின்ற திருவடியை நிறுத்தியவனென்றும், மற்றுஞ் சிலவாறும் நலிந்துபொருள்கொள்ளுகின்ற உரைகளெல்லாம் சிறவாமை காண்க. நாட்டினன் - தனதுதிருவடிபதிந்ததழும்பு என்றும் நிலையாக இருக்கும்படி அழுந்தவைத்தவன்; 'ஓ சர்ப்பராசனே! நீ கருடனுக்குப் பயப்படவேண்டாம், உன்சிரசில் என்திருவடி பொறித்த வடு இருத்தலைக் கண்டு உன்னை அவன் ஒன்றுஞ் செய்யமாட்டான்' என்று கண்ணன் காளியனுக்கு வரமளித்தமை காண்க.

சேர்வு - தொழிலாகுபெயர். 'சேர்பு' என்றும் பாடம். நாட்டினன் என்பது - மூன்றாமடியில் நாடு என்னும் பெயரினடியாகப் பிறந்த குறிப்புவினையா லணையும் பெயரும், நான்காமடியில் நாட்டு என்னும் பிறவினைப் பகுதியடியாகப் பிறந்த தெரிநிலைவினையாலணையும்பெயருமாம்; முந்தினதில், இன் - சாரியை; பிந்தினதில், இன் - இறந்தகாலவிடைநிலை.

எல்லா நூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுவது மரபாதலால், 'பொன்' என்று தொடங்கினர். மங்கலச் சொற்கள் இன்னவென்பதை "சீர் மணி பரிதி யானை திரு நில முலகு திங்கள், கார் மலை சொல்லெழுத்துக் கங்கை நீர் கடல் பூத்தேர் பொன், ஏருறு மிவைமூவாறுமிதிற் பரியாயப்பேரும், ஆரு மங்கலச்சொற் செய்யுளாய்ந்து முன்வைக்க நன்றாம்" என்ற நிகண்டினால் அறிக. (க)

உ. சோதிமதி வந்துதவழ் சோலைமலை யோடிரண்டாய்
மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடமே—போதி
லிருப்பாற் கடலா னிபமூர்ந்தார்க் கெட்டாத்
திருப்பாற் கடலான் சிலம்பு.

(இ - ள்.) சோதி மதி வந்து தவழ் - ஒளிநிறைந்த சந்திரன் வந்துதவழப்பெற்ற [மிகவும்உயர்ந்த], சோலைமலையோடு - திருமாலிருஞ்சோலைமலையோடு சேர்ந்து, இரண்டு ஆய் - இரண்டாகி, மேதினியாள் கொங்கை நிகர் - பூமிப்பிராட்டியினது இரண்டுதனங்கள் போல்கின்ற, வேங்கடமே—, —போதில் இருப்பார்க்கு - தாமரைமலரில் இருப்பவனான பிரமதேவனுக்கும், அடல் ஆன் இபம் ஊர்ந்தார்க்கு - வலிமையையுடைய ருஷபத்தையும் ஐராவதயானையையும் (முறையே வாகனமாகக்கொண்டு) ஏறிச்செலுத்துபவரான சிவபிரானுக்கும் தேவேந்திரனுக்கும், எட்டா - எட்டாத, திரு பால் கடலான் - திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருப்பவனான திருமாலினது, சிலம்பு - திருமலை; (எ - று.)

'சோதிமதிவந்துதவழ் சோலைமலை' என்றது, **தொடர்புயர்வுநவிற்சியணி.** 'சோலைமலையோ டிரண்டாய் மேதினியாள் கொஙகை நிகர் வேங்கடம்' என்றது, **உவமையணி.** சிறப்பும் உயர்வு முள்ள வடக்குத் திருமலையாகிய திருவேங்கடமும், தெற்குத்திருமலையாகிய திருமாலிருஞ்சோலைமலையும், பூமியாகிய பெண்ணின் இரண்டு தனங்களாக வருணிக்கப்பட்டன. பருத்த வடிவத்தையும், மிக்க வலிமையையும், பூமிதேவியின் நாயகனான திருமால் விரும்புமிட மாதலையும் விளக்கும் உவமை. திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரியதிருமடலில் "தென்ன னுயர்பொருப்பும் தெய்வ வடமலையும், என்னு மிவையே முலையா வடிவமைந்த, அன்ன நடைய அணங்கு" என்றதை அடியொற்றியது, இவ்வருணனை. அதன் வியாக்கியானத்தில், 'மேரு மந்தராதிகளைச் சொல்லாதே திருமலைகளைச் சொல்லுவானென் னென்னில்,—முலைகளாகின்றன, காந்தன் விரும்பி விடாதே படுகாடுகிடக்குமவையாய்த்து; ஸர்வேச்வரன் விரும்பி நித்யவாசம்பண்ணுமிடங்களிறே இரண்டு திருமலைகளும்' என்ற வாக்கியம் இங்கு உணரத்தக்கது "பொதியமு மிமயமும் புணர்முலை யாக" என்ற பெருங்கதையோடும் "கொங்கையே பரங்குன்றமுங் கொடுங்குன்றும்" என்ற திருவிளையாட புராணத்தோடும் இதனை ஒப்பிடுக. மிகப்பலவான சோலைகளையுடையதா லால், சோலைமலையென்று திருநாமம்; 'வநகிரி' என்று வடமொழிப்பெயர் "ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ் சோலையதே" என்றார் பெரியா வாரும். இத்திருமலை, பாண்டியநாட்டி லுள்ளது.

"பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கு அரிய, வித்தகன்' என்றபடி எம்பெருமான் அன்புமிக்க அடியார்கட்கு எளியவனாவனே யன் அகங்காரத்தோடு 'நாம் தேவர்' என்கிற அமரர்கட்கு எளியவனல்ல னெ பது, பின்னிரண்டடியில் விளக்கப்பட்டது. எட்டாமை - மனத்தினு நினைத்தற்கும், மொழியினாற் சொல்லுதற்கும், மெய்யினாற் சேர்தற்கும் இ லாதபடி இருத்தல். எட்டாஎன்றது, திருப்பாற்கடலானுக்கு அடைமொழ ஆன் என்ற பொதுப்பெயர் - இங்கு, பசுவின் ஆணின்மேல் நின்றது

மாலைக்கோ லித்திரியும் வையகத்தோர் தம்பிறவி
வேலைக்கோர் வங்கமாம் வேங்கடமே—சோலைத்
தருமா தரைநட்டான் றண்முல்லை யாயர்
தருமா தரைநட்டான் சார்பு.

(இ - ள்.) மாலை - மயக்கத்தை, கோலி - தம்மிடத்திலே கொண்டு, திரியும் - (பலவிடங்களிலும்) அலைகின்ற, வையகத்தோர்தம் - நிலவுலகத்திலுள்ளாருடைய, பிறவி-பிறப்பாகிய, வேலைக்கு-கடலுக்கு, ஓர் வங்கம் ஆம் - ஒரு மரக்கலம் போன்ற, வேங்கடமே——.——-சோலை தரு - (தேவேந்திரனது நந்தனவனமென்னும்) பூஞ்சோலையி லுள்ள பாரிசாத விருட்சத்தை, மா தரை நட்டான் - பெரிய பூமியிற் கொணர்ந்து நாட்டியவனும், தண் - (நீர்வளத்தால்) குளிர்ச்சியான, முல்லை முல்லைநிலத்தில் வசிக்கின்ற, ஆயர் - இடையர்கள், தரும் - பெற்ற, மாதரை - பெண்களை [கோபஸ்திரீகளை], நட்டான் - விரும்பிக் கூடியவனு மாகிய திருமால், சார்பு - (திருவுள்ளமுவந்து) சார்ந்திருக்கு மிடமாம்; (எ - று.)—கடற்கு - கடல்கடத்தற்கு.

மால் - மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை முதலியன. கோலி என்ற இறந்தகாலவினையெச்சத்தில், கோல் - வினைப்பகுதி. மாலைக் கோலித் திரியும் வையகத்தோர் என்பதற்கு - எம்பெருமானை நாடித் திவ்விய தேசயாத்திரை செய்கின்ற நிலவுலகத்தா ரென்றும் பொருள்கொள்ளலாம். காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி மேன்மேல் வருதலாலும், அச்சந்தருதலாலும், கடத்தற்கு அரிதாதலாலும், பிறப்புக் கடலெனப்பட்டது; கடலி லிறங்கியவர் அக்கடலைக் கடந்து அக்கரை சேர்தற்கு மரக்கலம் கருவியாவதுபோலப் பிறப்பில்அகப்பட்டவர் அதனையொழித்துமுத்தி பெறுதற்குத் திருவேங்கடமலை சாதனமாகு மென்க. எனவே, வேங்கடம் தன்னையடைந்தார்க்கு வினையொழித்து வீடுதரவல்ல தென்றதாம்.

சத்தியபாமையின் பொருட்டு கண்ணன் தேவலோகத்திலிருந்து பாரிஜாத தருவைத் துவாரகைக்குக் கொணர்ந்து நாட்டின வரலாறும், கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளியபொழுது தன்னிடங்காதல்கொண்ட பல கோபகன்னிகைகளைத் தானும் காதலித்து அவர்களோடு கூடிக் குலாவினமையும், பாகவதத்திற் பிரசித்தம். முல்லை - காடும், காடுசார்ந்த இடமும். ஆயர் - பசுக்களுக்கு உரியவர். நட்டான் - இறந்தகாலவினையாலணையும்பெயர்கள்; முறையே நடு, நள்-பகுதிகள். சார்பு-தொழிலாகுபெயர்.

இச்செய்யுளின் பின்னிரண்டடியில் யமகம் அமைந்திருத்தல் காண்க.

௪. நாலு திசைமுகமு நண்ணுதலா லொண்கமல
மேலுறலால் வேதாவாம் வேங்கடமே—சாலுறையு
மண்மயக்கந் தேற்றுவித்தான் மாற்றுதல்போ லாரியனு
லுண்மயக்கந் தேற்றுவித்தா னூர்.

(இ - ள்.) நாலு திசை முகமும் நண்ணுதலால் - நான்கு திசைகளையும் நோக்கிய நான்கு முகங்கள் பொருந்தியிருத்தலால் [நான்குதிக்கினிடங்களி

